# விட்டுக் கொடுக்காமல்
# ஒட்டிக் கொள்ளும்
# அற்புதமான பசை வெமிக்கால்

பார்க்கப் பார்க்கப் பரவசமூட்டும் பொம்மை வீடு கட்டிடுவீர். ஃபர்னிச்சர்கள் போட்டிடுவீர். கைக்கடக்கமாய் மெத்தெனப் பஞ்சடைத்த மிருக பொம்மைகள், பயமுறுத்தும் முகமூடிகள், மரப் பாச்சிகள்.... மரம், காகிதம், கார்டுபோர்டு, துணிகள் இவற்றின் துணையுடனே...

உங்கள் கற்பனையே வேடிக்கைக்கு எல்லை! உங்கள் ஓய்வு வேளையை உல்லாசமாய்க் கழித்திடச் சிறந்த வழி.

## VAMICOL®

ஆர்ட் அண்டு கிராஃப்ட் அட்ஹெஸிவ்






வேம் ஆர்கானிக்
கெமிக்கல்ஸ் லிமிடெட்
ஸ்கைலைன் ஹௌஸ், 85, நேரு பிளேஸ், புது தில்லி-110 019.

React/198/92 Tam

# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி




## குழந்தைகள் பள்ளியைத் தவிர்ப்பது ஏன்?

ஆரம்பக் கல்வி இலவசம் என்றிருந்த போதிலும் பல மாநிலங்களில் குழுந்தைகள் ஆரம்பப் பள்ளிகளில் படிப்பு முடிவதற்கு முன்பே நின்று விடுகிறார்கள். இதனால் மாநில அரசுகள் கவலைப்படுகின்றன. இது ஏன் நிகழ்கிறது என்று தமிழக அரசும், மகாராஷ்டிர மாநில அரசும் ஆராய முற்பட்டன.

நான்காவது வகுப்பை அடையுமுன்பே 25 சதவீதக் குழந்தைகள் பள்ளிப் படிப்பை நிறுத்திவிட்டு குடும்ப வருமானத்தை அதிகரிக்க வேலைக்குச் சென்று விடுகின்றன என்று தமிழக அரசின் ஆய்வில் தெரிய வந்துள்ளது. இன்னொரு 25 சதவீதக் குழந்தைகள் தம் வீட்டு வேலைகளில் வீட்டில் சிறு குழந்தைகளைப் பார்த்துக் கொள்ளவும் நிறுத்தப்படுகிறார்கள். அல்லது ஆடு மாடுகளை மேய்க்க அனுப்பப்படுகிறார்கள். அப்படி நிகழ்வது பொருளாதார நிலையால்தான்.

மகாராஷ்டிர மாநில ஆய்வின்படி குழந்தைகளைக் கவர வகுப்பறைகளில் எதுவும் இல்லை என்பது தெரிகிறது. சொல்லிக் கொடுக்கும் முறை சரியா இல்லாததால் குழந்தைகளால் புரிந்து கொள்ள முடியவில்லை.

டில்லியில் நடத்தப்பட்ட ஆய்வில் குழந்தைகளுக்கு ஏழு முதல் பத்து புத்தகங்கள் படிக்க முதல் வகுப்பிலேயே கொடுக்கப்படுகின்றன என்றும் இதனால் இவற்றையும் நோட்டுக்களையும் வாங்கப் பெற்றோர்கள் மிகவும் சிரமப் படுகிறார்கள்.

கல்வித் துறை வல்லுனர்கள் இத்தகைய கொடுமைகளைக் கடுமையாக கண்டிக்கிறுர்கள். இது போதாது. இவர்கள் தற்போதைய கல்வி முறைகள் குழந்தைகள் மனதைக் கவரும் வகையில் அமைக்கப் பாடுபடவேண்டும்.

மதிமுகம்: 93 செப்டம்பர் 1993 புன்னகை: 3

தனிப்பிரதி: ரூ. 4-00 வருட சந்தா: ரூ. 48-00



# பராக்கிரமப் போட்டி

MASTERS OF THE UNIVERSE

சுற்றிலும் 'தீயசக்திகள்'. போராட வேண்டிய தருணம் வந்து விட்டது. க்ரேஸ்கல் கோட்டையை கைப்பற்ற ஆபத்தான இட்டர்னியா பாதைகளில் பயணம். 'மாஸ்டர்ஸ் ஆஃப் தி யுனிவர்ஸ்' படைதிரட்டி வாருங்கள். தேவை : ஒரு பகடை, சேர்ந்து விளையாட ஒரு தோழன். (தோழியுடனும் விளையாடலாம்.)

| | | | | |
|---|---|---|---|---|
| 1 | 2 ஓர்கோ | 3 | 4 | 5 |
| 6 பிரின்ஸ் ஆடம் | 7 | 8 | 9 | 10 |
| 11 | 12 பேட்டில் கேட் | 13 | 14 | 15 |
| 16 | 17 | 18 | 19 | 20 |
| 21 | 22 | 23 | 24 ஹீ-மேன் | 25 |
| 26 பீஸ்ட் மேன் | 27 | 28 | 29 | 30 |

வாழ்த்துக்கள்

இப்போது மாபெரும் சக்தி உங்களிடம்.




HTA-1108-94

செய்திகளும் தகவல்களும்:

# இரு பெண் பிரதமர்கள்






அண்மையில் இரு நாடுகளில் பெண்கள் பிரதமர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். ஜூன் 14ல் திருமதி டான்சா சில்லர் துருக்கியின் முதலாவது பெண் பிரதமராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு பதவி ஏற்றார். இதற்குப் பனிரெண்டு நாட்களுக்குப்பின் செல்வி கிம் காம்பெல் கனடாவின் 19ஆவது பிரதமராகப் பதவி ஏற்றார். இவரும் கனடாவின் முதலாவது பெண் பிரதமராவார்.

துருக்கி அதிபர் தர்கட் ஓஜால் கடந்த ஏப்ரலில் திடீரென இறந்ததால் அப்போது பிரதமராக இருந்த சுலைமான் டெமிரெல் துருக்கியின் அதிபரானார். இதனால் ஆளும் கட்சியான 'ட்ருபாத் பார்ட்டி' புதிய பிரதமரைத் தேர்ந்தெடுக்க வேண்டியதாயிற்று. டெமிரெல் மந்திரிசபையில் நிதி அமைச்சராக இருந்த நாற்பது வயது சில்லர் பிரதமர் பதவிக்குப் போட்டியிட்டார். அவரை எதிர்த்து 65 வயதான உள்விவகார மந்திரி இஸ்மத் செஸ்டின் போட்டி போட்டார். இவருக்கு 320 வாக்குகளும் சில்லருக்கு 570 வாக்குகளும் கிடைத்தன. இவ்வளவுக்கும் சில்வருக்கும் மூன்று வருடகாலம் அமைச்சராக இருந்த அனுபவம்தான்.

பாஸ்பரஸ் பல்கலைக் கழகத்தில் பொருளியலில் பட்டம் பெற்ற சில்லர் அமெரிக்காவின் ஏல் பல்கலைக் கழகத்தில் உயர் பட்டம் பெற்றார். அதன்பின் துருக்கியின் பல பல்கலைக் கழகங்களில் 1978 முதல் பணியாற்றினார். 1990ல் ட்ருபாத் கட்சியில் சேர்ந்து 1991ல் டெமிரெல் அமைச்சரவையில் நிதி மந்திரியானார். இவர் நிதி அமைச்சராகி 20 மாதங்களில் வியாபாரத் துறையில் பல மாற்றங்களைக் கொண்டு வந்தார். நாட்டின் இளைய தலைமுறையினரும் பெண்களும் முன்னேறப் பாடுபட்டு வரலானார்.

துருக்கிப் பாராளுமன்ற உறுப்பினர்களில் பெரும்பாலானோர் முதியவர்கள். ஆயினும் அவர்கள் தம்மை விட வயதில் சிறியவரும் பெண்ணுமான சில்லரின் தலை

மையை ஏற்றார்கள். முதியோரிடம் இருந்து நாட்டின் தலைமை இளைய தலைமுறைக்குத் வந்தது வரலாற்றின் சிறப்புமிக்க நிகழ்ச்சியாகும். எனவே சில்லர் நாட்டின் ஆட்சி முறையை மாற்றி வருவதில் வியப்பு எதுவும் இல்லைதான்.




கனடாவிலும் ஒரு இளம் பெண் பிரதமராகியுள்ளார் எனலாம். 45 வயதான கிம் காம்பெல் வழக்கறிஞராக இருந்து ஆளும் கட்சியான புரோகிரெஸிவ் கன்செர்வடிவ் கட்சியில் சேர்ந்து ஐந்தாண்டுகளில் உயர் பதவியைப் பெற்றார். இவர் பிரியான் மல்ரோனி அமைச்சரவையில் சட்ட மந்திரியாகவும் பாதுகாப்பு மந்திரியாகவும் இருந்தார்.

நாட்டின் வியாபாரம் குறைந்து கடன் சுமை அதிகரிக்க பல வியாபார நிறுவனங்கள் மூடப்பட்டன. வேலையின்மை அதிகரித்தது. இதனால் மக்களிடையே மனக்கொந்தளிப்பு ஏற்பட மல்ரோனி பிரதமர் பதவியிலிருந்து விலக முடிவு செய்தார். அதனால் ஆளும் கட்சி கிம் காம்பெல்லைத் தலைமைப் பதவிக்குத் தேர்ந்தெடுத்தது.

கனடாவில் வரும் நவம்பரில் நாடாளுமன்றத் தேர்தல் நடக்கப் போகிறது. அதில் கன்சார்வெடிவ் கட்சி வென்றால் மீண்டும் காம்பலே பிரதமராவார். அமெரிக்க அதிபர் கிளிண்டன் இளைஞர்தானே என எண்ணி கனடா நாடு ஒரு இளம் பெண்மணியிடம் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்தது போலும். காம்பெல் நன்கு கிடார் வாசிப்பார். சதுரங்கம் விளையாடுவார். ரஷ்ய இலக்கியத்தில் ஈடுபாடு கொண்டவர்.

**பெண் பிரதமர்கள் :**

* திருமதி கோல்டா மேயர்-இஸ்ரேயில் * திருமதி இந்திரா காந்தி-இந்தியா * திருமதி சிரிமாவோ பண்டார நாயகே-ஸ்ரீலங்கா * திருமதி மார்க்கரெட் தாச்சர்-இங்கிலாந்து * திருமதி பேநஜீர் புட்டோ-பாகிஸ்தான் * திருமதி பேகம் கலீதா ஜியா-பங்களா தேஷ்



# பாட்டி சொன்னாள்

ஏழைக் குடும்பத்தில் பிறந்த கண்ணம்மா தன் மகள் ஊர்வசியின் திருமணம் பற்றிக் கவலைப்படலானாள். அழகிய பெண் குழந்தை பிறந்தது என்று கண்ணம்மாவின் மாமியார் அழகிற்குப் பேர் போன தேவ கன்னிகை ஊர்வசியின் பெயரை அக்குழந்தைக்கு வைத்தாள். ஊர்வசிக்கு ஒரு வயதாவதற்கு முன் அவளது தந்தை இறந்து போனான். கண்ணம்மா மிகவும் சிரமப்பட்டு ஊர்வசியை வளர்த்து வந்தாள்.

ஊர்வசி பெரியவளாகியும் குழந்தைத்தனம் போகவில்லை. சிறுவர் சிறுமியருடன் அவள் கோலி குண்டு விளையாடலானாள். அதைக் கண்ட எதிர் வீட்டுக்காரி ஒருநாள் "தடிமாடு போல வளர்ந்தும் இன்னமும் தெருவில் கோலி விளையாடுகிறாயே. உனக்கு வெட்கமாக இல்லை?" என்று கேட்டாள்.

அதுகேட்டு அவள் தன் பாட்டியிடம் போய் சொல்லவே அவளது பாட்டியும் "ஆமாம். இனி நீ தெருவில் விளையாடக் கூடாது. உன் அழகிற்கு உன்னை ஒரு ராஜகுமாரனே வந்து கொத்திக் கொண்டு போவான்" என்றாள். ஊர்வசியும் அதை முழுக்க முழுக்க நம்பினாள்.

அன்றுமுதல் ஊர்வசி தெருவில் விளையாடப் போகாமல் சன்னல் ஓரமாக உட்கார்ந்து தன்னைத் தேடிக் கொண்டு எந்த ராஜகுமாரன் வரப் போகிறான் என்று எதிர்பார்க்கலானாள். அவளது தாயார் அப்படி உட்கார்ந்து ஒரு நம்பிக்கையை வளர்த்துக் கொள்ளக் காரணம் தன் மாமியார்தான் என அறிந்து அவள் மீது கோபம்

—சிவனார் செல்வன்—



கொண்டாள்.

அவள் தன் மாமியாரைக் கடிந்து கொள்ள அவள் படுத்திருந்த கட்டிலருகே போனாள். அவளைத் தட்டி எழுப்ப முயன்ற போது அவ்ளது உடல் சில்லிட்டு விறைத்துப் போனது கண்டு திடுக்கிட்டாள். தன் மாமியார் இறந்ததால் பிரச்னைகளைத் தானே எப்படி சமாளிப்பது என்று திகைக்கலானாள்.

கிழவி இறந்து இரண்டு மாதங்களாகி விட்டன. கண்ணம்மா தன் மகளுக்கு விவாகம் செய்து வைக்க முயன்றாள். அந்த ஊரில் யாரும் ஊர்வசியை மணந்து கொள்ள இசையவில்லை. வெளியூரிலிருந்து கல்யாணத் தரகர் ஒரு மாப்பிள்ளைப் பையனைக் கொண்டு வந்தார். அவன் பார்க்க லட்சணமாக இருந்தான். ஒற்றைக் கண்ணன்.

அவன் பெண் பார்க்க வந்த போது ஊர்வசி அவனிடம் "நீ எந்த நாட்டு ராஜகுமாரன்?" என்று கேட்டாள். அவனது தாயார் அவன் வயலில் வேலை செய்பவன் எனக் கூறவே ஊர்வசி "பூ! இவ்வளவுதான்ா? போ. போ. எனக்காக ராஜகுமாரன் வருவான்" என்று கூறி அவனை நிராகரித்து விட்டாள்.

கண்ணம்மாள் அதன் பிறகு தன் மகளிடம் "நீ உன் பாட்டி சொன்னதையே நம்பிக் கொண்டிருக்கிறாய். அப்படி ஒன்றும் நடக்காது. உன்னை மணக்க எந்த நாட்டு ராஜகுமாரனும் வர மாட்டான். எனவே நான் தேர்ந்தெடுப்பவனைக் கல்யாணம் செய்து கொள்" என்று அறிவுறுத்திப் பார்த்தாள்.

ஆனால் ஊர்வசியோ "அம்மா! பாட்டி உன்னை விட அனுபவம் பெற்றவள். வயதில் முதிர்ந்தவள். அதனால் பாட்டி சொன்னதை நான் உறுதியாக நம்புகிறேன். என்னைத் தேடிக் கொண்டு ஒரு ராஜகுமாரன் வரத்தான் போகிறான்" என்று உறுதியுடன் கூறினாள்.

கண்ணம்மாவுக்கு ஊர்வசியின் பிரச்னை பெருத்த தலைவலியாகி விட்டது. ஒரு நாளிரவு ஊர்வசி சன்னலருகே உட்கார்ந்து ராஜ குமாரன் வருவானா என்று பார்த்துக் கொண்டிருந்தாள். கண்ணம்மாளோ வீட்டின் கொல்லைப் புறத்திலிருந்த புளிய மரத்தின் கீழ் உட்கார்ந்து கொண்டு தன் மகளின் மனதில் ராஜகுமாரனைப் பற்றிய எண்ணத்தை நிலை நிறுத்தி விட்டுப் போன தன் மாமியாரை மனதாரச் சபித்துக் கொண்டிருந்தாள்.



அப்போது சற்று முன் அந்த மரத்தில் வந்து உட்கார்ந்த ஆண் பிசாசு ஒன்று கண்ணம்மாவைப் பார்த்து "இறந்தவர்களை அதுவும் குறிப்பாக மாமியாரைத் திட்டுவது மகாப் பாவம். இதை நீ செய்யலாமா?" என்று கேட்டவாறே அவள் முன் குதித்தது. முதலில் பிசாசைக் கண்டு கண்ணம்மா பயந்தாலும் பிறகு சுதாரித்துக் கொண்டாள்.

அவள் அந்தப் பிசாசைப் பார்த்து "என்ன செய்வது? என் மனத்தில் உள்ளதை எப்படியாவது சொல்லித்தானே அழவேண்டும். அப்போதுதான் பாரம் சற்று இறங்கினது போலிருக்கும்" என்றாள். பிசாசும் "அப்படியா! சரி, சொல் உன் பிரச்னை என்ன என்று. நான் அமைதியுடன் கேட்கிறேன்" என்றது.

கண்ணம்மாவும் தன் மகளைப் பற்றி விவரமாகக் கூறினாள். பிசாசும் அதை கவனமாகக் கேட்டுவிட்டு "காலம்தான் எப்படி மாறிப் போய்விட்டது! நான் நாளை இரவும் மறுபடியும் வருகிறேன். அப்போது உன் மகளின் மனதை மாற்றுகிறேன்" என்று கூறிச் சென்றது.

மறுநாள் பிசாசு ராஜகுமாரனின் வேஷத்தில் ஒரு குதிரை மீது சவாரி செய்தவாறே கண்ணம்மாவின் வீட்டிற்கு வந்தது. அது ஊர்வசி உட்கார்ந்திருந்த சன்னலருகே போனபோது அவள் ஒரேயடியாக மகிழ்ந்து போய் "ஆகா!



பாட்டி சொன்னது பலிக்காமல் போகுமா? ராஜகுமாரா! இது எங்கள் வீடு. உள்ளே வா" என்று அழைத்தாள்.

அதற்கு பிசாசு "வானளாவி நிற்கும் அரண்மனையில் வசிக்கும் நான் இந்தச் சிறு குடிசைக்குள் எப்படி வருவது? நீ வீட்டைவிட்டு வெளியே வா. நாம் உலாவி விட்டு வருவோம்" என்றது.

ஊர்வசி மகிழ்ந்து போய் வீட்டிலிருந்து வெளியே ஓடிவந்து குதிரைமீது அமர்ந்து கொண்டாள். பிசாசு அவளைக் காட்டிற்குள் வெகுதூரம் கொண்டு போயிற்று. கொஞ்ச நேரமானதும் ஊர்வசி "ராஜகுமாரா! எனக்குப் பயமாய் இருக்கிறது. நீ ஏதாவது பேசு" என்றாள்.

பிசாசும் "பேசுவதா! என்ன சொல்வது! உம். ஒரு சாதாரண விஷயம் சொல்கிறேன். நேற்றுத் தான் நான் என் அண்ணனுக்கு விஷத்தைக் கொடுத்துக் கொன்றேன்" என்றது. ஊர்வசியும் "ஏன் கொடுத்தாய்?" என்று கேட்டாள். பிசாசு பலமாகச் சிரித்து "என் அண்ணன் உயிருடன் இருந்தால் எனக்கு சிம்மாசனம் கிடைக்காதே" என்றது.

ஊர்வசியும் "இது பாவம் இல்லையா?" என்று கேட்டாள். பிசாசும் "ராஜகுமாரன் பாவம் புண்ணியம் என்று பார்த்துக் கொண்டிருந்தால் முன்னுக்கு வர முடியாது. மூன்று நாட்களுக்கு முன்தான் என் கிழத் தந்தையை மேல்லோகத்திற்கு அனுப்பி வைத்தேன். அடுத்த மாதத்திற்குள் நான் மன்னனாகி அண்டை நாட்டின் மீது படை எடுத்துப் போய் அதைக் கைப்பற்றப் போகிறேன். அந்நாட்டின் ராஜகுமாரியையும் சிறைப்பிடித்து வரப் போகிறேன்" என்றது.

இவ்வாறெல்லாம் பயங்கர விஷயங்களை கூறினால் ராஜகுமாரர்கள் ராட்சஸ குணம் படைத்தவர்கள் என ஊர்வசி நினைத்து ராஜகுமாரர்கள் மீது வெறுப்படைவாள் எனப் பிசாசு நினைத்தது.

ஆனால் ஊர்வசியோ எதுவும் பேசவில்லை.

சற்று நேரத்திற்குப் பின் பிசாசு சட்டென ஊர்வசியைக் குதிரை மீதிருந்து கீழே இறக்கி விட்டு "ஆ! நான் சேனாதிபதியுடன் மூன்றாவது ஜாமத்தில் இரகசிய ஆலோசனை நடத்த வேண்டும். அதை மறந்து உன்னோடு வீண் பொழுது போக்கிக் கொண்டிருந்து விட்டேனே. நான் போகிறேன்" என்றது.

அதுகேட்டு ஊர்வசி பயந்து போய் "ஐயோ! நடுராத்திரியில் நடுக்காட்டில் என்னை விட்டுப் போகிறாயே. என்னை புலியோ, சிங்கமோ அடித்துக் கொன்று தின்றுவிடுமே" என்றாள்.

பிசாசும் "தின்னட்டுமே! அதனால் என்னவாம்! நான் ராஜகுமாரன். என்னை மணக்க ஆயிரம் ராஜகுமாரிகள் போட்டி போட்டுக் கொண்டு வருவார்கள். நீ போனால் எனக்குக் கவலை இல்லை" என்று கூறி மறைந்து போயிற்று.

ஊர்வசி அழுதுகொண்டே உட்கார்ந்திருந்தாள். அப்போது ஒரு வாலிபன் குதிரை மீது சவாரி செய்தவாறே அங்கு வந்தான். அவன் அவளைப் பார்த்து "யார் நீ? நடுராத்திரியில் இந்தக் காட்டில் ஏன் அழுது கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டான். அவளும் "நான் ஊர்வசி" என்று விக்கிக் கொண்டே இருந்தாள்.



அதுகேட்டு அந்த வாலிபன் குதிரை மீதிருந்து குதித்து "ஆகா! என்ன அதிர்ஷ்டம். நான் ரம்பை, ஊர்வசி ஆகிய இருவரில் ஒருத்தியைக் கல்யாணம் செய்து கொள்ள நினைத்தேன். எனக்கு ஊர்வசி கிடைத்து விட்டாள். வா. என் குதிரை மீது ஏறி அமர்ந்து கொள். என் கோட்டைக்குப் போவோம். நாளையே நாம் கல்யாணம் செய்து கொள்வோம்" என்றாள்.

ஊர்வசியும் "நீ உண்மையிலேயே ராஜகுமாரன்தானா?" என்று கேட்டாள். அவனும் "சந்

தேகப்படாதே. நான் ராஜகுமாரன் தான். வா. குதிரை மீது ஏறு'' என்றான். ஊர்வசி மகிழ்ந்து போய் குதிரை மீது அமர்ந்தாள். இருவரும் அரண்மனையை அடைந் தார்கள்.

தன் மகளைக் காணவில்லையே என்று கண்ணம்மா கவலைப்பட் டுக் கொண்டிருந்தபோது தன் வீட்டின் முன் ஒரு பல்லக்கு வந்து நிற்பதைக் கண்டாள். அவளை அதில் ஏற்றி அரசாங்க வீரர்கள் அரண்மனைக்குக் கொண்டு சென்ற போது அவளது ஆச்சரியத்திற்கு அளவே இல்லை. அங்கு ராணியே வந்து வரவேற்று உள்ளே அழைத் துச் சென்றாள்.

அவள் கண்ணம்மாவிடம் ''என் மூத்த மகன் கந்தர்வ கன்னியைத் தான் மணக்கப் போவதாகக் கூறிக் கொண்டிருந்தான். அதற்கு ஏற்ப என் மாமியாரும் உனக்கு ரம்பையோ ஊர்வசியோதான் மனைவியாகக் கிடைப்பாள் என்று கூறி வந்தார். அதனால் அவன் கந்தர்வ கன்னிகை கிடைப்பாளா எனத் தேடிக் கொண்டிருந்தான். நேற்றிரவு உன் மகளைக் காட்டில் தனியாகப் பார்த்ததும் அவளது அழகால் கந்தர்வப் பெண் என்று எண்ணி விட்டான். அவளும் தன் பெயர் ஊர்வசி என்று கூறவே அவன்தான் நினைத்தது சரியே என்று எண்ணி விட்டான். நானும் என் மகனுக்கு கல்யாணம் ஆனால் போதும் என்று எண்ணி னேன். என் கவலையும் தீர்ந்தது'' என்றாள்.

கண்ணம்மாளும் ''என் மாமியா ரும் என் மகள் மனதில் அவளை ஒரு ராஜகுமாரன்தான் மணப் பான் என்று பதிய வைத்திருந் தாள். ஆக இரண்டு பாட்டிகளும் சொன்னது சரியாய் போயிற்று'' என்றாள் சிரித்துக் கொண்டே.

ஊர்வசிக்கும் ராஜகுமாரனுக் கும் விமரிசையாக விவாகம் நடை பெற்றது.





# அதிசய மலர்

5

*[சேனாதிபதி கம்பீரசிம்மன் தென்கடற்கரைக்குப் போய் ராட்சஸ மிருகத்தைப் பார்த்து விட்டு அதுபற்றி மன்னனிடம் கூறினான். வடபகுதியில் மலர்ந்த அதிசய மலர்தான் அந்த ராட்சஸ மிருகத்தைக் கவர்ந்து இழுப்பதாக ராஜகுரு சொன்னார். வடபகுதி மலைவாழ் மக்களின் உதவி கோரி ராட்சஸ மிருகத்தை ஒழிக்க வேண்டும் என்று தீர்மானிக்கப் பட்டது. அதன்பிறகு–]*

மலைவாழ் மக்களிடையே மன்னன் பிரதாபவர்மன் வரும் செய்தி பரவிவிட்டது. மலைச் சாதியினர் தலைவன் சாம்பன் உடனே எல்லோரையும் ஓரிடத்தில் வந்து கூடும்படி அறிவித்தான். யாவரும் வந்து சேர்ந்ததும் சாம்பன் "நம் மன்னர் இன்னும் சற்று நேரத்தில் இங்கு வரப் போகிறார். அவரை நாம் தக்க விதத்தில் வரவேற்று மரியாதை செய்ய வேண்டும்" என்றான்.

மக்களும் உடனே தம் வீடுகளுக்குப் போய் வண்ண ஆடைகளை அணிந்து கொண்டு வந்தனர். மன்னனை வரவேற்க உற்சாகத்துடன் வரிசையாக நின்றனர். சற்று நேரத்திற்குப்பின் குதிரைகள் வருவதை அவர்கள் கண்டனர்.

அவர்கள் மலைச் சாதியினர்



துச் சென்றான். அங்கு மூங்கிலா லான ஆசனம் கொண்டு வரப் பட்டது. அதன் பக்கம் ஒரு முக் காலியும் போடப்பட்டது. முதலா வது ஆசனத்தில் மன்னனை உட் காரும்படியும் முக்காலியில் இள வரசியை உட்காரும்படியும் சாம் பன் வேண்டினான்.

அவன் அவர்களுக்கு எதிரே ஒரு விரிப்பில் அமர்ந்து கொண்டு "அரசே! தாங்கள் எங்கள் மீது கருணை கொண்டு இங்கு விஜயம் செய்தது எங்களது பெரும் பாக் கியமே. தங்களது இக்காருண்யம் மிக்க செயலை என்றென்றும் மறக்க மாட்டோம்" என்றான்.

நின்ற இடத்தை அடைந்ததும் முத லில் மெய்க்காவலர்கள் குதிரை களின் மீதிருந்து கீழே இறங்கி மன்னன் பக்கம் போய் நின்றார் கள். மலைச் சாதியினர் தலைவன் சாம்பன் மன்னனைக் கைகூப்பி வணங்கி வரவேற்றான். மன்னன் புன்னகை புரிந்தவாறே குதிரை யிலிருந்து இறங்கி சாம்பனைக் கட்டித் தழுவிக் கொண்டான்.

அவன் இளவரசியை சாம்ப னுக்கு அறிமுகம் செய்து வைத்த வாறே "இவள்தான் என் மகள் பிரியம்வதை. இவன்தான் தளபதி வீரசிம்மன்" என்று கூறினான். சாம்பன் மன்னனை அருகே இருந்த ஒரு மரத்தின் நிழலின் கீழ் அழைத்

சில பெண்கள் சிறு தட்டுகளில் பழங்களை எடுத்து வந்து அவர் கள் முன் வைத்தனர். மன்னனும் இளவரசியும் மற்றவர்களும் சாப் பிட்டுக் கொண்டிருக்கும் போது இன்னிசை முழங்கியது. அதன் பிறகு சில அழகிய பெண்கள் மூங்கில் கம்புகளைக் கைகளில் வைத்துக் கொண்டு ஒரு அமைப் பில் நின்றனர்.

அவர்களுக்குப் பின்னாலிருந்து தம்பட்ட ஒலிகள் கிளம்பின. அதற்கு ஏற்ப அப்பெண்கள் மூங் கில் கோல்களைத் தட்டி வட்ட வடிவில் சுற்றலாயினர். அந்த வட் டத்துள் சில அழகிகள் சென்று நடனமாடினர். அதைக் கண்டு இளவரசி மகிழ்ந்து போனாள்.



நடனம் முடிந்ததும் மன்னன் தன் இருக்கையிலிருந்து எழுந்தான். அவன் அங்கு கூடியிருந்த ஆடவர் களையும் பெண்களையும் ஒரு முறை பார்த்தான். அவர்கள் எல் லோரும் கைதட்டி ஆர்ப்பரித்த னர். மன்னன் அவர்களை எல் லாம் அமைதியாக இருக்கும்படிக் கூறிவிட்டு பின்வருமாறு சொன் னான்.

"நீங்கள் எல்லாம் என்பால் காட்டிய அன்பிற்கும் மரியாதைக் கும் மிக்க நன்றி. இப்போது நான் இங்கு வந்தது வேறொரு முக்கிய மான வேலைக்காகத்தான். இந் தப் பகுதிக்கு மட்டும் அல்ல, மாணிக்கபுர நாட்டிற்கே பெரும் ஆபத்து வந்திருக்கிறது. நம் தென் கடற்கரைப் பகுதியிலுள்ள ஒரு ராட்சஸ மிருகம் இங்கு மலரும் அதிசய மலரால் கவர்ந்து இழுக் கப்பட்டுள்ளது. அது இரவு வேளை களில் தென் கடல் பகுதியி லிருந்து கிளம்பி வடக்கு நோக்கிச் சென்றுவிட்டு சூரியோதயம் ஆகு முன் மீண்டும் தென்கடலுக்குள் வந்து அதனுள் மறைகிறது. அது வெளியே செல்லும்போது அதன் காலடிபட்டு மக்களோடு வீடுகளும் பூமிக்குள் அமிழ்ந்து போகின்றன. நல்லவேளையாக அந்த பயங்கர மிருகம் நீங்கள் வசிக்கும் இப்பகுதிக்கு இன்னமும் வரவில்லை. அதை எதிர்த்தும் போராட மனிதர்களால் முடியாது. எனவே அது இனிமேல் நம் நாட் டிற்குள்ளேயே வராமல் இருக்க ராஜகுரு ஒரு யோசனை கூறி இருக்கிறார். அது அதிசய மலருக் காக வடதிசையில் அலைகிறது என்பது நன்கு தெரிகிறது. அத னால் அது இருக்கும் இடத்தில் அதிசய மலர்களைக் கொண்டு போய்ப் போட்டுவிட்டால் அது கடலிலிருந்து வெளியே வரவே வராது. இதைச் செய்ய உங்கள் உதவி வேண்டும்" என்றான்.

மன்னன் இவ்வாறு கூறியதும் சற்று நேரம் அங்கு அமைதி நிலவி யது. சற்று நேரத்திற்குப் பின் மலைச் சாதியினர் தலைவன் சாம்

பன் "அரசே! நாட்டிற்காக எங்கள் உயிரை அர்ப்பணிப்பதை எங்களது மாபெரும் பாக்கியமாகக் கருதுகிறோம். அந்த ராட்சஸ மிருகத்திடமிருந்து நம் நாட்டைக் காப்பது எங்கள் கடமை. இன்று தென்பகுதிக்கு வந்துள்ள ஆபத்து நாளை வடபகுதிக்கு வரத்தான் வரும். இதுபற்றி தாங்கள் கூறி எச்சரித்ததற்கு தங்களுக்கு மிகவும் கடன் பட்டிருக்கிறோம். இப்போது நாங்கள் என்ன செய்ய வேண்டும் என்று கட்டளை இடுங்கள். அதன்படி நடக்கிறோம்" என்று பணிவுடன் கூறினான்.



தலைவர் கூறியதே சரி எனச் சொல்வது போல் மற்றவர்கள் கை தட்டினார்கள். அப்போது அவர்களிடையே இருந்து வந்த வாலிபன் ஒருவன் மன்னனின் முன் போய் நின்று வணங்கினான். அவனைக் கண்டதும் இளவரசி மன்னனிடம் "அதிசய மலர்களை அன்று எனக்குப் பரிசளித்தவன் இவனே" என்று கூறினாள்.

அவனும் "ஆம் இளவரசியாரே. அதிசய மலரால் தங்களுக்கே அழிவு என்பதைத் தெரியாமல் தங்களுக்கு அளித்தவன் நான்" எனக் கூறி மன்னனைப் பார்த்து "அரசே! நான் இப்போதே அதிசய மலருடன் அந்த ராட்சஸ மிருகம் இருக்கும் இடத்திற்குப் போகிறேன்" என்றான்.

மன்னனும் "மிக்க மகிழ்ச்சி உத்தமா. ஆனால் இதற்கு முதலில் உன் தலைவரின் அனுமதி பெற்றாக வேண்டும்" என்றான். உத்தமனும் தன் தலைவனைப் பார்த்தான். தலைவன் சாம்பனும் "சபாஷ் உத்தமா! உன் துணிச்சலை பாராட்டுகிறேன். ஆனால் நீ அந்த ராட்சஸ மிருகத்தை எப்படி எதிர்க்கப் போகிறாய்?" என்று கேட்டான்.

உத்தமனும் "நம் மன்னர் கூறியபடி அதிசய மலர்களை எல்லாம் பறித்து எடுத்துக் கொள்வேன். அவற்றோடு நான் ஒரு படகில் சென்று அந்த ராட்சஸ மிருகம் இருக்கும் இடத்தை அடைவேன். அங்கு



நான் கொண்டுபோன மலர்களைப் போடுவேன். அதன் பிறகு அது நம் நாட்டின் பக்கமே தலை காட்டாதுதானே'' என்றான்.

அதுகேட்டு மன்னன் ''நீ சொல்வது சரியே. நீ அங்கு போய் விட்டுத் திரும்பி வர சில நாட்களாகுமே. அதுவரை உன் குடும்பத்தவரைப் பாதுகாக்க நான் தக்க ஏற்பாடுகளைச் செய்கிறேன்'' என்றான். அப்போது சாம்பன் ''உத்தமனுக்குக் குடும்பம் என்று பெரிதாக எதுவும் இல்லை. இளம் வயதிலேயே அவன் தன் தாய் தந்தையரை இழந்துவிட்டான். இப்போது அவனுக்கு இருப்பது அவனது ஒரே தங்கை ரஜனி தானே'' என்றான்.

தலைவன் கூட்டத்திலிருந்த ஒரு இளம் பெண்ணை வரச் சொன்னான். அவள் வந்ததும் அவன் மன்னனிடம் ''இவள்தான் உத்தமனின் தங்கை ரஜனி'' என்றான். ரஜனி தன் கையில் வைத்திருந்த பூமாலையை இளவரசிக்கு அணிவித்தாள். அதுகண்டு யாவரும் கைதட்டித் தம் மகிழ்ச்சியைத் தெரிவித்தனர்.

இளவரசி ரஜனியின் கைகளைப் பிடித்தவாறே உத்தமனிடம் ''நீ போய்விட்டுத் திரும்பி வரும் வரை இவள் அரண்மனையில்தான் இருப்பாள்'' என்றாள். மன்னனும் சாம்பனிடம் ''என் மகள் ஆசை கொண்டு அம்மலர்ச் செடிகளை அரண்மனையில் வள்ர்க்க ஆசைப்பட்டாள். ஆனால் அதற்குள் சாபம் பற்றி ராஜகுரு எச்சரிக்கவே அவள் அந்த ஆசையைவிட்டு விட்டாள். ஆனால் அந்த மலர்களைப் பார்க்க வேண்டும் என்ற ஆசையோடுதான் இப்போது என் மகள் என்னுடன் வந்திருக்கிறாள். அந்த மலர்களை இவள் தூரத்திலிருந்தாவது பார்க்கலாம் அல்லவா?'' என்று கேட்டான்.

சாம்பனும் ''ஆகா! தாராளமாகப் பார்க்கலாமே'' என்றான். அப்போது உத்தமன் ''மன்னர் அனுமதித்தால் நானே இளவரசியாரை அழைத்துப் போய் அவற்

றைக் காட்டுகிறேன். குதிரை மீது சவாரி செய்துகொண்டு போனால் விரைவில் திரும்பி வந்துவிட லாம்'' என்றான்.

மன்னனும் "சரி. இப்போதே போய்விட்டுத் திரும்பி வந்துவிடு. கூட சில மெய்க்காவலர்களையும் அழைத்துச் செல்'' என்று உத்த மனிடம் கூறினான். பிறகு சாம்ப னிடம் "சரி. உன் மக்கள் வசிக் கும் பகுதிகளைப் பார்க்கச் செல் வோம்'' என்றான்.

இளவரசியும் உத்தமனும் குதிரை களின் மீது ஏறி முன் செல்ல அவர்களின் பின் சில மெய்க் காவ லர்களும் சென்றனர். அவர்கள் வெகுதூரம் போய் ஒரு குறுகிய பாதையை அடைந்தார்கள். அப் போது உத்தமன் பிரியம்வதையி டம் "இளவரசியாரே! இங்கிருந்து தான் நீங்கள் எச்சரிக்கையுடன் செல்ல வேண்டும். குதிரையை வேகமாக ஓட்டாதீர்கள். வழியின் இருபுறங்களில் ஆங்காங்கே மரங் களின் கிளைகள் குறுக்கிடும்'' என்றான்.

கொஞ்ச தூரம் போனதும் உத் தமன் இளவரசியிடம் "அதோ பாருங்கள் அழகிய மலர்களை. அவை தாம் அதிசய மலர்கள்'' என்றான். இளவரசி அந்த அழ கிய காட்சியைக் கண்டு மெய் மறந்து போனாள். மலைகளில் அடர்ந்த மூங்கில் புதர்களிடையே



அழகிய அதிசய மலர்களைக் கண்டு "ஆகா. எவ்வளவு அழகாக இருக்கிறது! இன்னமும் கொஞ் சம் பக்கத்தில் போய்ப் பார்க்க லாமா?'' என்று கேட்டாள்.

அப்போது உத்தமன் "வேண் டாம் இளவரசியாரே! குதிரை இனியும் முன்னே செல்ல முடி யாது. நடந்து செல்வதே ஆபத் தான வேலை'' என்றான். அது கேட்டு இளவரசி அங்கேயே நின்று மலர்களைப் பார்த்து ரசிக்கலா னாள். சற்று நேரமானதும் "இள வரசியாரே! இனி நாம் திரும்பிச் செல்லலாம்'' என்றான்.

அப்போது இளவரசி "இப்படி அழகாக உள்ள மலர்களுக்கு ஒரு

சாபமா? இந்த சாபம் எப்படியா வது விலக வேண்டும் என்றே ஆசைப்படுகிறேன்" என்று அந்த அழகிய காட்சியை மீண்டும் ஒரு முறை பார்த்து விட்டுக் குதிரையை வந்த வழியிலே திருப்பினாள்.

அவர்கள் மன்னன் இருக்கும் இடத்தை அடைந்தபோது மன்னன் அங்கிருந்து கிளம்பத் தயாராக இருந் தான். மன்னனைப் பார்த்ததும் இளவரசி "தந்தையே! என்ன அழ கான காட்சி அது! ஆனால் அந்த மலர்களைச் சேகரிப்பது மிகவும் சிரமமாயிற்றே" என்றாள். அப் போது சாம்பனோ "கடினமான வேலைகள் எல்லாம் எங்களுக் குப் பிடித்தமானவை" என்றான்.

மன்னன் உத்தமனைத் தன்ன ருகே அழைத்து "நீ ஏற்ற பணியை வெற்றிகரமாகச் செய்து முடிப் பாயாக. நீ திரும்பி வருவதை இந்த நாடே ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும். நாட்டின் நல னுக்காக நீ செய்யும் நற்பணி மிக வும் பாராட்டத்தக்கது" என்றான்.

பிறகு மன்னன் சாம்பனிடம் "உத்தமன் கிளம்பிச் சென்றதும் நீ உடனே ரஜனியை அரண்மனைக்கு அழைத்து வா" எனக் கூறிவிட்டு கிளம்பினான். பிரியம்வதையும் அன்புடன் ரஜனியின் தோளில் மெதுவாகத் தட்டிவிட்டுத் தன் குதிரையின் மீது ஏறி அமர்ந்தாள். அதன்பின் மன்னனும் இளவரசி யும் தளபதியுடனும் மெய்க் காவலர் களுடன் கிளம்பிச் சென்றனர்.

சாம்பன் உத்தமனை அழைத்து "உத்தமா! உன் தைரியமும் துணிச் சலும் பாராட்டத்தக்கவை. உன் னால் நம் இனத்திற்கே பேரும் புக ழும் கிடைக்கும். நீ மேற்கொண் டுள்ள வேலை ஆபத்தானது. அம் பிகையின் அருளால் நீ வெற்றி பெற்று க்ஷேமமாகத் திரும்பி வரு வாய்" என்று கனிவுடன் கூறித் தன் இருப்பிடத்திற்கு அழைத்துச் சென்றான்.

(தொடரும்)





## நீ கடவுளின் அவதாரம்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராமல் விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! இந்த பயங்கர நள்ளிரவில் நீ இப்படி ஒரு வேலையில் இறங்கி இருப்பது வீணான முயற்சி என்றே தோன்றுகிறது. உன் நோக்கம்தான் என்ன? பேரும் புகழும் பெறவா அல்லது பணம் அடையவா? மனிதன் உணர்ச்சி வசப்படாமலேயே தான் அடைய விரும்புவதைப் பெற்றுவிட முடியும். இதற்கு உதாரணமாக உனக்கு வைத்தியநாதர் என்ற பண்டிதரின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள். உனக்கும் வழியில் சிரமம் தெரி

## வேதாளம் சொல்லும் கதை



அந்தக் காரணத்தைக் காட்டி மன்னன் இசைக் கலைஞர்களை எல்லாம் வேலையிலிருந்து நீக்கி விட்டான். அதன்பின் மந்திரி ஓவியர்களையும் சிற்பிகளையும் அழைத்துக் கடவுளின் வடிவத்தை அமைத்துத் தரும்படிக் கட்டளை இட்டான். அவர்கள் வரைந்து கொண்டு வந்த ஓவியங்களையும் சிலைகளையும் பார்த்துவிட்டு "இவை கடவுளைப் போல உள்ளன என்பதற்கு என்ன அத்தாட்சி?" என்று அவரகளிடம் கேட்டான். அதற்கு அவர்களால் பதிலளிக்க முடியவில்லை. அதனால் மன்னன் அவர்களை வேலையிலிருந்து நீக்கி விட்டான்.

இதற்குப் பின் மந்திரி நடிகர்களையும் நடனமாடுபவர்களையும் அழைத்து அவர்களுக்கு ஒரு கதையைச் சொல்லி அதனை மன்னன் முன் நடித்தும் நடமாடிக் காட்டும்படியும் கூறினான். அவர்கள் அவ்வாறே செய்ய அது தனக்குப் புரியவே இல்லை என்று கூறி அவர்களையும் மன்னன் வேலையிலிருந்து நீக்கிவிட்டான்.

முடிவில் மந்திரி ஆஸ்தானக் கவிஞர்களையும் பண்டிதர்களையும் அழைத்து "இளவரசர் போர்க் கலைகளில் நன்கு தேர்ச்சி பெற்று விட்டார். ஆனால் அறிவை வளர்க்கும் கல்வி பெறவில்லை. அவருக்கு எல்லா சாஸ்திரங்

யாது இருக்கும்" என்று கூறிக் கதையை ஆரம்பித்தது.

ஒரு காலத்தில் பிரதாபசிம்மன் என்ற மன்னன் இருந்தான். அவனுக்குத் தன் தர்பாரில் உள்ள கலைஞர்களைக் கண்டாலே பிடிக்கவில்லை. அவர்களால் நாட்டிற்கு எவ்வித நன்மை இல்லை என்று எண்ணி அவர்களை எப்படி வேலையிலிருந்து நீக்குவது என்று மந்திரியிடம் யோசனை கேட்டான்

மந்திரியும் முதலில் பாடகர்களை அழைத்து அவர்கள் பாடி மழையை வரவழைக்க வேண்டும் என்று கூறினான். அவர்களால் அப்படிச் செய்ய முடியவில்லை.

களையும் கற்றுக் கொடுத்து உங்களை விடச் சிறந்த பண்டிதராகச் செய்ய வேண்டும்'' என்று கூறினான்.

அவர்கள் இளவரசனைப் பரீட்சித்துப் பார்த்தார்கள். அவனால் எதையுமே கற்க முடியாது என்றும் அவனுக்குத் தான் இளவரசன் என்ற கர்வம் இருப்பதையும் கண்டார்கள். எனவே அவர்களால் அவனுக்கு எதையும் கற்பிக்க முடியவில்லை. இதைக் காரணம் காட்டி மன்னன் அவர்களைப் பதவியிலிருந்து நீக்கிவிட்டான்.

இப்படி இருக்கையில் வைத்தியநாதர் என்ற மகாவித்வான் பேரும் புகழும் பணமும் சம்பாதிக்க வேண்டும் என்ற ஆசையோடு பிரதாபசிம்மனின் அண்டை நாட்டு மன்னனான பலசேனனிடம் சென்றார். ஆனால் அந்த அரசனின் சபையிலிருந்த பண்டிதர்கள் அவரை அவமானப்படுத்தினார்கள்.

அதனால் அவர் மனம் ஒடிந்து போகாமல் "அரசே! உங்கள் சபையில் உள்ள பண்டிதர்களின் அறிவு அரை குறையானது. முதலில் அவர்களுக்கு நல்ல கல்வி புகட்ட வேண்டும்: இது என் ஒருவனால்தான் முடியும். அதனால் என்னை உங்கள் அவையில் வைத்துக் கொள்ளுங்கள்'' என்றார்.

பலசேனனும் சிரித்தவாறே "என் அவைப் பண்டிதர்களுக்கு



அரை குறை அறிவு என்றே வைத்துக் கொள்வோம். ஆனால் நீங்கள் பெரும் பண்டிதர் என்பதற்கு என்ன அத்தாட்சி?. என் அண்டை நாட்டு மன்னன் பிரதாபசிம்மன் கலைஞர்களையும் பண்டிதர்களையும் வெறுத்துப் பதவியிலிருந்தே நீக்கிவிட்டான். நீங்கள் அங்கு போய் அவன் மனதை மாற்றிவிட்டால் என் ஆஸ்தான பண்டிதர்களை எல்லாம் உங்கள் சிஷ்யர்களாக்கி விடுகிறேன்'' என்றான்.

வைத்தியநாதரும் அவ்வாறே செய்வதாகக் கூறி பிரதாபசிம்மனைக் காணச் சென்றார். பிரதாபசிம்மனோ "எனக்கு இந்த கலைஞர்கள், கவிஞர்கள், பண்டிதர்



கள் ஆகியோரைக் கண்டாலே பிடிக்காது. நீங்கள் வேறு யாராவது மன்னனைப் பாருங்கள்'' என்றான்.

அவரும்''அரசே! நான் கவிஞனும் பண்டிதரும் மட்டுமல்ல. சகல கலா வல்லவன் எனப் பாராட்டி எவ்வளவோ மன்னர்கள் என்னைத் தம் தர்பாரில் வைத்துக் கொள்வதாகக் கூறினார்கள். ஆனால் எனக்கென்னவோ உங்கள் தர்பாரில் இருக்கவேண்டும் என்று ஆசையாக இருக்கிறது'' என்றார்.

அதுகேட்டு பிரதாபசிம்மன் ''அப்படி அவ்வளவு அரசர்களையும் விட்டுவிட்டு என்னிடம் வந்தீர்கள் என்றால் என்னிடம் ஏதோ சிறப்பு இருப்பதால்தானே'' என்று கேட்டான்.

வைத்தியநாதரும் ''அரசே! நீங்கள் அவதார புருஷர். அதனால்தான் உங்களுக்குக் கலைஞர்களும் பண்டிதர்களும் அற்பமாகத் தோன்றுகிறார்கள்'' என்றார். அதுகேட்டு மன்னன் ''ஓகோ! என் சிறப்புகளை நான் சரியாக உணரவில்லை'' என்றான்.

வைத்தியநாதரும் ''உங்களது ஆட்சியில் நாடு செழிப்பாக உள்ளது. உரிய காலத்தில் மழை பெய்கிறது. பயிர்கள் நன்கு விளைகின்றன. அதனால்தான் மிகச் சிறந்த பாடகர்கள் பாடினாலும் மழை பெய்யவில்லை. ஏனெனில் மழை பெய்தால் உங்கள் நாட்டில் வெள்ளம் பெருகிச் சேதம் ஏற்பட்டால் நீங்கள் சபித்து விடுவீர்களோ எனப் பயந்தே மழை பெய்யவில்ல. இது தங்களது சிறப்புகளில் ஒன்று'' என்றார்.

அதுகேட்டு பிரதாபசிம்மன் மகிழ்ந்துபோய் ''சரி, பாடகர்கள் விஷயம்தான் இப்படி என்றால் ஓவியர்களும் சிற்பிகளும் ஏன் நான் சொன்னபடி செய்யவில்லை?'' என்று கேட்டான். வைத்தியநாதரும் ''மகாவிஷ்ணு பரசுராமர் அவதாரம் எடுத்தபின் ராமாவதாரம் எடுத்தார். ராமாவதாரத்தால் பரசுராமரின் சக்தி மங்கியது. அதுபோல நீங்கள் பகவானின் அவதா

ரம். அதனால் ஓவியர்களும் சிற்பி களும் எவ்வளவு முயன்றாலும் கடவுளின் வடிவை உருவாக்கிக் கொடுக்க முடியவில்லை" என்றார்.

அப்போது பிரதாபசிம்மன் "நான் கடவுள் என்பதற்கு என்ன அத்தாட்சி?" என்று கேட்டான். வைத்தியநாதர் "ராமர் மாயங்கள் புரியவில்லை. புத்தர் மாயா ஜாலங்கள் புரியவில்லை. அவர்களது அரிய செயல்களால் மக்கள் அவர்களைக் கடவுளின் அவதாரம் என்று கூறினார்கள். மேலும் கடவுள் பக்தி உள்ளவர்களுக்கே அவர் தென்படுவார். எனக்குச் சிறு வயதிலிருந்தே கடவுள் பக்தி அதிகம். நான் உங்களில் கடவுளைக் காண்கிறேன். இதற்கான அத்தாட்சி எதையும் நான் கொண்டு வர முடியாது. ஓவியர்களும் சிற்பிகளும் ஓரளவு அக்கடவுளின் அம்சத்தைக் காட்டினார்கள். என்னால் அதுகூட முடியவில்லை" என்றார்.

மன்னன் அதுகேட்டு "என் ஓவியர்களும் சிற்பிகளும் என்னைக் கடவுள் என்று நிரூபிக்க முடியவில்லையே" என்று கேட்டான். வைத்தியநாதரும் "கடவுள் என்றதும் அவர்கள் கண்முன் தோன்றியது உங்கள் உருவமே. ஆனால் எப்படி சூரியனின் உருவத்தை வரைந்தாலும் அதன் ஒளியை



அதில் காட்ட முடியாதோ அவர்களால் அவ்விதம் செய்ய முடியாமல் அவர்கள் தங்களது முந்தைய அவதாரங்களையே உருவாக்கினார்கள். இந்த அவதாரங்களின் மகிமை விரைவிலேயே மறைந்து விடும். அப்போது அவர்கள் உங்கள் உருவத்தைத்தான் செய்து காட்டுவார்கள்" என்றார்.

பிரதாபசிம்மன் அவரைப் பாராட்டி விட்டு நடிகர்களும் நடன மாடியவர்களும் ஏன் தவறினார்கள் என்று கேட்டான். அவரும் "அவர்கள் தெய்வாம்சம் பொருந்திய சம்பவங்களைத்தான் நடித்துக் காட்டுபவர்கள் அல்லது தாங்கள் ஒரு கதையைச் சொன்னால்



அதை நடித்துக் காட்டுவார்கள். யாரோ எதையோ எழுதியதை அவர்கள் நடித்தால் யாருக்குத் தான் புரியும்? நீங்கள் சில நடிகர் களிடம் நீங்களாக ஒரு கதை கூறுங் கள். அதை அவர்கள் நடிப்பது புரியும்'' என்றார்.

மன்னன் மந்திரியிடம் கூறி சில நடிகர்களை வரவழைத்தான். அவர் களுக்கு அவன் ஒரு கதையைச் சொல்லி நடித்துக் காட்டச் சொன் னான். அப்போது அவர்களது நடிப்பின் பொருள் அவனுக்குப் புரிந்தது. அவன் வைத்தியநாதர் கூறியது சரியே எனச் சொல்லி மகிழ்ந்தான்.

மந்திரியோ கேலியாக "எனக்கு இவர்கள் நடித்தது எதுவும் புரிய வில்லை. எனவே வைத்தியநாத ரும் சிரித்தவாறே "பகவானின் லீலைகள் உமக்குப் புரியாமல் போனது ஆச்சரியமே இல்லை" என்றார்.

பிரதாபசிம்மன் கைதட்டி "பண் டிதரே! பேஷ்! பேஷ்!! நான் யாரென்பதை எனக்கு உணர்த்தி விட்டீர்கள். என் மகனை நீங்கள் மகா வித்வானாக ஆக்கிவிட்டால் உங்களுக்கு என்றென்றும் கடன் பட்டிருப்பேன்" என்றான்.

பண்டிதரும் "இது என் பாக் கியமே. இளவரசன் ஒரே நாளில் எல்லா சாஸ்திரங்களையும் கற்றுக் கொள்ளும்படிச் செய்கிறேன்" என்றார். "ஒரே நாளிலா?" என்று மன்னன் ஆச்சரியப்பட்டான்.

வைத்தியநாதர் இளவரசனைத் தனியாக அழைத்துப்போய் "உன் தந்தை கடவுள். அவதார புருஷர். நீயும் அவர்போல ஆக இரண்டு வழிகள் உள்ளன. நீ வாரத்திற்கு இரண்டு நாள் உபவாசம் இருந்து மரக்கிளையில் தலைகீழாகத் தொங்கி தவம் செய்ய வேண்டும். பத்து வருட காலம் எல்லா சாஸ் திரங்களையும் படிக்க வேண்டும். இது மிகக் கடினமான வழி. மற் றது எளிதானது. உன் நாக்கை நீட்டினால் நான் அதில் ஒரு மந் திரம் எழுதுவேன். இதில் எது வேண்டும்?" என்று கேட்டார்.



இளவரசனும் உற்சாகத்தோடு "நான் இரண்டாவது வழியை தேர்ந்தெடுக்கிறேன்" என்றான். வைத்தியநாதரும் அவனைத் தட்டிக் கொடுத்து "சரி. ஆனால் இதற்கு சில நியமங்கள் உண்டு. நான் உன் நாக்கில் அந்த மந்திரத்தை எழுத வேண்டுமானால் நீ உன் கோபத்தை விட்டுவிட வேண்டும். அமைதியுடன் இருக்க வேண்டும். உன்னைவிடப் பெரியவர் யாரைக் கண்டாலும் மரியாதையுடன் வணங்க வேண்டும். உன்னை விடச் சிறியவர்களிடம் அன்புடன் பழக வேண்டும். உனக்கே எல்லாம் தெரிந்திருந்த போதிலும் நீ பிறர் யோசனை கேட்டு நடக்க வேண்டும். எப்போதும் சிரித்துக் கொண்டே இருக்க வேண்டும். இதை எல்லாம் செய்தால்தான் என் மந்திரம் பலிக்கும். இவற்றைச் செய்யா விட்டால் அந்த மந்திரம் பூதமாக மாறி உனக்குத் தொல்லைகளைக் கொடுத்துக் கொண்டே இருக்கும்" என்றார்.

இளவரசனும் "நீங்கள் கூறிய படி செய்கிறேன். நீங்கள் மந்திரத்தை என் நாக்கில் எழுதுங்கள்" என்றான். வைத்தியநாதரும் அவனது நாக்கில் மந்திரத்தை எழுதிவிட்டு மன்னனிடம் சென்று "இளவரசர் எதையும் சட்டெனப் புரிந்து கொள்கிறார். நான் எதிர்பார்த்ததைவிட வெகுவிரைவிலேயே எல்லா சாஸ்திரத்தையும் கற்றுக் கொண்டுவிட்டார்" என்றார்.

பிரதாபசிம்மனும் "அப்படியா! அதற்கு என்ன அத்தாட்சி?" என்று கேட்டான். வைத்தியநாதரும் "நன்கு படித்தவர்களை அவர்களது பேச்சிலிருந்தும் நடத்தையிலிருந்தும் புரிந்து கொள்ளலாம். இப்போது முதலே இளவரசரை நன்கு கவனித்துப் பாருங்கள்" என்றார்.

மன்னனும் ஒருவார காலம் தன் மகனின் பேச்சையும் நடத்தைகளையும் கவனித்தான். அவற்றில் நல்ல மாற்றம் ஏற்பட்டது கண்டு

வைத்தியநாதரைப் பாராட்டி அவரைத் தன் அவையிலேயே இருக்கும்படி வேண்டினான்.

ஆனால் வைத்தியநாதரோ அதற்குச் சம்மதியாமல் தான் பிரதாபசிம்மனின் புகழை நாடெங்கும் பரப்புவதாகக் கூறி விடை பெற்றுக் கொண்டார். பிரதாப சிம்மனும் மகிழ்ந்து ஏராளமான பரிசுகளையும் பணத்தையும் கொடுத்து அனுப்பினான். வைத்தியநாதர் சில நாட்களுக்குப் பின் பலசேனனின் தர்பாருக்குச் சென்று அங்கு அரசாங்க பண்டிதர் பதவியை ஏற்றார்.

வேதாளம் இக்கதையைக் கூறி "மன்னனே! வைத்தியநாதர் தம் திறமையை பிரதாபசிம்மனிடம் வெளிப்படுத்திய போதிலும் அவனது அவையில் பண்டிதர் பதவி ஏற்காமல் பலசேனனின் அவைப் பண்டிதராக ஏன் ஆனார்? இதற்கு சரியான பதில் தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும்" என்று கேட்டது.

அதற்கு விக்கிரமன் "பிரதாப சிம்மன் சற்றும் அறிவில்லாதவன் என வைத்தியநாதர் கண்டு கொண்டார். அதனால் அவர் சாதுரியமாக பிரதாபசிம்மனிடம் பேசி கலைஞர்களிடமும் பண்டிதர்களிடமும் அவன் கௌரவமும் மரியாதையும் காட்டும்படிச் செய்தார். மாபெரும் பண்டிதரான வைத்தியநாதர் பிரதாப சிம்மனின் சபையில் பதவி ஏற்பது சரியல்ல. எனவே அவன் கொடுத்த பரிசுகளோடு பலசேனனிடம் சென்று பதவி ஏற்றுப் பேரும் புகழும் பெற எண்ணினார்" என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவன் மௌனம் கலையவே, அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் மரத்தில் ஏறிக்கொண்டது.



# அம்புலிமாமா அனுபந்தம்—58

நம் நாட்டுப் பறவைகளும், மிருகங்களும்:

## 'ரீசெஸ்' குரங்குகள்



மனித ரத்தத்தை ஆர். எச். பாசிடிவ், ஆர். எச். நெகடிவ் என இரு பிரிவுகளாகப் பிரித்திருக்கிறார்கள். ஆர். எச். என்ற எழுத்துக்கள் ஒருவகைக் குரங்குகளைக் குறிக்கும். அதாவது கிட்டத்தட்ட மனித ரத்தம் போல உடலில் கொண்டுள்ள குரங்குகள்.

இக்குரங்குகளில் லாங்கர், மேகாக் என இருவகைகள் உண்டு. இவற்றில் மேகாக் குரங்குகள் உலகப் புகழ் பெற்றவை. ஏனெனில் இதன் ரத்தம் மனித ரத்தத்தைப் போலவே இருக்கும். இக் குரங்குகளை ஆராய்ச்சிக்காகப் பயன்படுத்துகிறார்கள். அதனால் இவற்றை ஏராளமாக நம் நாட்டிலிருந்து அயல் நாடுகளுக்கு அனுப்புகிறார்கள். இவ்வாறாக இவற்றின் எண்ணிக்கை குறைந்து கொண்டே வருகிறது. இந்தக் குரங்கினமே அழிந்து விடுமோ என்ற நிலை ஏற்படவே நம் அரசு இவற்றை அயல் நாடுகளுக்கு அனுப்பத் தடைவிதித்து விட்டது.

ரீசெஸ் குரங்குகள் வட இந்தியாவிலும் மத்திய இந்தியாவிலும் நிறைய உள்ளன. ஒரு ஆண்டில் இப்பகுதிகளில் ஆறு மாத காலம் கடுங்குளிர் இருப்பதால் இவற்றின் உடல்களில் அடர்ந்த ரோமங்கள் உள்ளன. இவற்றின் உயரம் சுமார் 60 செ. மீ. ஆகும்.

கிராமங்களிலும், நகரங்களிலும், கோவில்களிலும், குளக்கரைகளிலும், ரயில் நிலையங்களிலும் இவை கூட்டம் கூட்டமாகத் திரிவதைக் காணலாம்.




## ராஜா ரவிவர்மா

இன்றைய இந்திய ஓவியக் கலைத் துறையில் சிறப்பிடத்தைப் பெற்று விட்ட ராஜா ரவிவர்மா திருவாங்கூர் அரச வம்சத்தவர். இவர் 1848ல் திருவனந்தபுரத்திற்கு நாற்பது கி.மீ. தூரத்திலுள்ள ஒரு கிராமத்தில் பிறந்தார்.

குழந்தைப் பருவத்திலேயே ரவிவர்மா சுவர்களில் மிருகங்களின் உருவங்களையும் மரங்களின் படங்களையும் வரையலானார். பெரியவர்கள் தடுத்தும் கேளாமல் ஏதாவது ஒரு படத்தை வரைந்து கொண்டே இருப்பார். சிறுவரான ரவிவர்மாவுக்கு ஓவியக் கலையில் ஆர்வம் இருப்பது கண்டு அவருடைய தாய் மாமனான ராஜா ராஜவர்மா இவருக்கு உற்சாக மூட்டி வந்தார்.



இருவரும் திருவனந்தபுரத்தை அடைந்தனர். வண்ண ஓவியங்கள் புதிய முறையில் பிரபலமாகிக் கொண்டிருந்த காலம் அது. அரண்மனையில் பணிபுரிந்து கொண்டிருந்த அழகிரி நாயுடு என்ற ஓவியரிடம் எண்ணெய் கலந்த வண்ணங்கள் கொண்டு ஓவியங்கள் வரைவதை ரவிவர்மா கற்றுக் கொண்டார்.

ரவிவ்ர்மா பிரபல டச்சு ஓவியரான தியோடர் ஜென்சனின் ஓவிய வரைமுறைகளால் ஈர்க்கப்பட்டார். அவரிடம் நேரடியாக ஓவியக் கலையை கற்க முடியாது போனாலும் அதே

முறையில் ரவிவர்மா தம் ஓவியங்களைத் தீட்டலானார்.

ரவிவர்மா இராமாயணம், மகாபாரதம் போன்ற நம் புராணக் கதைகளை நன்கு கற்றவர். எனவே அவற்றின் நாயகர்களையும், நிகழ்ச்சிகளையும் புதிய முறையில் வரைந்து எல்லோருடைய பாராட்டுதல்களையும் பெற்றார்.

சென்னையில் 1882ல் நடைபெற்ற ஓவியக் கண்காட்சியில் கவர்னர் இவருக்குத் தங்கப் பதக்கம் அளித்து கௌரவித்தார். பரிசு பெற்ற அந்த ஓவியம் பின்னர் வியன்னாவில் ஓவியக் காட்சியில் வைக்கப்பட்டு உலகத்தவரின் கவனத்தை ஈர்த்துப் பாராட்டுதல்களைப் பெற்றது. உலகப் புகழ் பெற்ற ரவிவர்மா தமது எண்பத்தோறாவது வயதில் அமரரானார்.

கவியரசர் ரவீந்திரநாத டாகூர் ரவிவர்மாவின் ஓவியங்களைப் பற்றி இவ்வாறு கூறினார்: "ரவிவர்மாவின் ஓவியங்களைக் கண்டு களித்தவாறே எவ்வளவோ காலைகளை இன்பமாகக் கழித்திருக்கிறேன். அவற்றை நான் பெரிதும் மதிக்கிறேன். புராணங்களில் வரும் கதாபாத்திரங்களை உயிர் பெற்றது போல வரைந்து ஏற்ற பாவனைகளையும் நிகழ்ச்சிகளையும் அற்புத ஓவியங்களாக அளித்திருக்கிறார் இவர்."



# உங்களுக்குத் தெரியுமா?

1. அயோத்தி மன்னர் லோமபாதரின் புதல்வி யார்? அவள் யாரை மணந்தாள்?
2. 'டேபிள் டென்னிஸ்' ஆட்டத்தை யார் எப்போது புகுத்தினார்?
3. போபாலுக்கும் போஜபாலுக்கும் என்ன சம்மந்தம்?
4. பூமியில் நீர்ப் பகுதி எவ்வளவு?
5. 'தமிழ் வேதம்' என எந்த நூலைக் குறிப்பிடுகிறார்கள்?
6. ரோம் நகரைப் போல ஏழுமலைகளிடையே அமைந்துள்ள இந்திய நகரம் எது?
7. வைரம் எதில் கரையும்?
8. நம் நாட்டில் ஒரு மலைச் சாதியினரின் பெயரைக் கொண்ட மாநிலம் எது?
9. விக்கிரமாதித்தனின் அவையின் நவரத்தினங்கள் எனப்படுபவர்கள் யாவர்?
10. ஒரு சீன சக்கரவர்த்தியின் தர்பாரில் ஒரு ஐரோப்பியர் பணிபுரிந்தார்? அந்த ஐரோப்பியர் யார்? சக்கரவர்த்தி யார்?
11. 'கருநாடு' என்று எந்த மாநிலத்தை அழைக்கிறார்கள்?
12. விமானத்தின் மாதிரியை முதலில் தயாரித்தவர் யார்?
13. நாயன்மார்கள், ஆழ்வார்கள் எனப்படுவோர் யார்?
14. ஆங்கிலேயர் கல்கத்தாவில் கட்டிய கோட்டையின் பெயர் என்ன?
15. ஒரு டம்ளர் நீரில் ஐஸ் கட்டியைப் போட்டால் நீரில் மட்டம் உயருமா?

## விடைகள்

1. சாந்தா, ரிஸ்யசிருங்க முனிவர்.
2. இங்கிலாந்தின் ஜேம்ஸ் கிப். 1888ல்
3. மத்திய பிரதேஷ் தலைநகர் போபால். போஜ்பால் என்ற ஏரிக்குள் அமைந்துள்ளது.
4. சுமார் 70 சதம்.
5. திருக்குறள், திருவள்ளுவர்.
6. திருவனந்தபுரம்.
7. அதிக வெப்பத்தால்
8. மிஜோரம்-மிஜோ என்றால் மலை மனிதன்.
9. காளிதாசர், வேதாள பட்டர், கடகார் சகர், க்ஷபணகர், அமரசிங்கர், வரருசி, சங்கர், தன்வந்திரி.
10. இத்தாலியின் மார்கோ போலோ, குப்ளாய்கான்.
11. கர்நாடகம்.
12. டியனார்டோ டாவின்ஸி.
13. நாயன்மார்கள் சிவபக்தர்கள், ஆழ்வார்கள் விஷ்ணு பக்தர்கள்.
14. வில்லியம் கோட்டை.
15. உயராது.



# பகை தீர்ந்த விதம்

**மா**ணிக்கபுரியில் ஞானசேகரன், இந்துசேகரன், சந்திரசேகரன் என்ற மூன்று நண்பர்கள் ஆரம்ப முதல் ஒன்றாகப் பள்ளியில் படித்து வந்தார்கள். அவர்களில் ஞானசேகரன் படிப்பில் கெட்டிக்காரன். அவன் தன் நண்பர்களுக்குத் தெரியாத பாடங்களை எல்லாம் சொல்லிக் கொடுத்து உதவியும் வந்தான்.

நண்பர்கள் மூவரும் பெரியவர்களானார்கள். அவர்களது படிப்பும் முடிந்தது. மேற்கொண்டு என்ன செய்யலாம் என்று ஒருநாள் மூவரும் கூடி யோசித்தார்கள். அப்போது ஞானசேகரன் "நண்பர்களே! நாம் நம்மை ஏதோ ஒரு உத்தியோகம் என்று கட்டுப்படுத்திக் கொள்ளக்கூடாது. பிறரிடம் கைகட்டி வாழ்நாள் முழுவதும் அடிமை போல ஏன் இருக்க வேண்டும்? ஏதாவது வியாபாரம் செய்து முன்னுக்கு வர முயல்வோம்" என்றான்.

மற்ற இரு நண்பர்களும் "வியாபாரமா? இது நமக்கு முற்றிலும் புதியதுறை ஆயிற்றே. இதற்கு அனுபவம் வேண்டாமா?" என்று கேட்டார்கள். அதற்கு ஞானசேகரன் "உத்தியோகம் பார்ப்பதற்கும் அனுபவம் வேண்டுமே. எதிலும் முதலில் இறங்கினால்தான் பிறகு அனுபவம் என்பது ஏற்படும். எனவே நாம் தயங்காமல் இத்துறையில் இறங்குவோம்" என்று தைரியம் கொடுத்தான்.

மற்ற இரு நண்பர்களும் ஒருவாறு சம்மதித்தவர்களாக "சரி. என்ன வியாபாரம் செய்யலாம்" என்று கேட்டார்கள். ஞானசேகரனும் "நம் ஊரில் பாக்கும் தென்னையும் ஏராளமாக விளை

—பவானி சங்கரன்—



கின்றன. நாம் இவற்றைக் கொண்டு போய் மல்லித் தீவிலும், அல்லித் தீவிலும் நல்ல விலைக்கு விற்று அங்கு மலிவாகக் கிடைக்கும் வாசனைத் திரவியங்களை வாங்கி வந்து இங்கு நல்ல விலைக்கு விற்போம். இதற்கு நாம் சொற்ப பணத்தையே முதலீடு செய்தால் போதும்'' என்றான்.

மூன்று நண்பர்களும் தம் தாய் தந்தையரைச் சம்மதிக்க வைத்துத் தம் வியாபாரத்திற்கான பணத்தை யும் பெற்றுக் கொண்டார்கள். அவர்கள் அதனைக் கொண்டு பாக்கும் தேங்காய்களும் வாங்கிக் கப்பலில் ஏற்றிக் கொண்டு மல்லித் தீவிற்குச் சென்றார்கள்.

அங்கு அவர்கள் அயல் நாட்டினர் தங்கும் விடுதி ஒன்றில் போய்த் தங்கினார்கள். இரவில் ஞானசேகரன் தன் மற்ற இரு நண்பர்களிடம் "நாம் நாளை வெவ்வேறு பகுதிகளில் வியாபாரம் செய்யப் பிரிந்து செல்வோம். மாலையில் இங்கு வந்து சேர்வோம்'' என்றான். மற்ற இருவரும் "தனியாகவா நாங்கள் போவது?'' என்று தயங்கியவாறே கேட்டார்கள்.

ஞானசேகரனும் "தயங்காமல் தைரியமாகப் போங்கள். அப்போது தான் நமக்கு நல்ல அனுபவம் ஏற்படும்'' என்றான். மறுநாள் காலை மூவரும் தனித்தனியே நகருக்குள் சென்றார்கள். அன்று மாலை முதலில் விடுதிக்கு வந்தவன் ஞானசேகரன்தான். அவன் உற்சாகத்துடன் இருந்தான். சற்று நேரத்தில் இந்துசேகரனும் சந்திரசேகரனும் வந்தார்கள்.

அவர்கள் சுரத்து இல்லாமல் இருப்பது கண்டு ஞானசேகரன் "ஏன் இப்படி இருக்கிறீர்கள்? என்ன நடந்தது?'' என்று கேட்டான். அவர்களும் "என்ன என்று சொல்வது? நாங்கள் வியாபாரம் பேசப் போனோமா? எங்களது பேச்சிலிருந்தே நாங்கள் அனுபவம் இல்லாதவர்கள் என்று அவ்வூர் வியாபாரிகள் கண்டு, "நீங்கள் வியாபாரத்திற்குப் புதிதா?'' என்று கேட்டு கேலி செய்தார்

கள். நாங்கள் அவமானத்தால் தலைகுனிந்து கொண்டோம். இது தான் இன்று எங்களுடைய அனுப வம்'' என்று மனம் உடைந்து போய்க் கூறினார்கள்.

அவர்கள் ஞானசேகரனின் அனு பவம் என்ன என்று கேட்கவே அவனும் ''ஏதோ பரவாயில்லை. கொஞ்சம் சரக்குகளை விற்க முடிந்தது. காஷ்மீர நாட்டு வியா பாரிகள் சிலரைச் சந்தித்தேன். சில சிங்கள வியாபாரிகளுடனும் பேசினேன். அவர்களும் என் சரக்கு களை வாங்கிக் கொள்வதாக உறுதி கூறி இருக்கிறார்கள். என் சரக்கு கள் விலை போனால் நல்ல லாபமே கிடைக்கும்'' என்றான்.



அதுகேட்டு மற்ற இரு நண்பர் களும் மகிழ்ச்சி அடைவதற்கு பதி லாக மன வாட்டமே அடைந்தார் கள். அடுத்து இரண்டு மூன்று நாட்களிலும் மூன்று நண்பர்களும் வியாபாரம் செய்யத் தனித்தனியே சென்றனர். ஞானசேகரன் மூன்று நாட்களில் தான் கொண்டு வந்த சரக்கு முழுவதையும் நல்ல லாபத் திற்கு விற்றுவிட்டான்.

இந்துசேகரனாலும் சந்திரசேகர னாலும் தாம் கொண்டு வந்த சரக் கில் கால் பகுதியைக் கூட விற்க முடியவில்லை. அதைக் கண்ட ஞான சேகரன் அவர்களது சரக்குகளுக்கு பேரம் பேசி நல்ல விலைக்கு விற்றும் தந்தான்.

இவ்வாறாக மூன்று நண்பர் களிடமும் நிறையப் பணம் சேர்ந் தது. ஞானசேகரன் தன் நண்பர் களிடம் ''நம் வியாபாரம் கடவுள் கிருபையால் நன்கு நடந்தது. எனவே இங்குள்ள மல்லிக் குன்றத்தில் கோவில் கொண்டுள்ள மல்லிகா தேவியை இன்று மாலை தரிசித்து விட்டு வரலாம்'' என் றான். மற்ற இரு நண்பர்களும் இதற்கு இணங் கினார்கள்.

மூவரும் அன்று மாலை மல்லிக் குன்றுக் கோவிலுக்குச் சென்று மல்லிகா தேவியை தரிசித்தார் கள். அதற்குப் பிறகு கோவிலின் பின்புறமுள்ள நந்தவனத்தைக் காண அவர்கள் சென்றார்கள்.



நந்தவனத்தில் கீழ் பள்ளத்தில் மாலினி நதி வேகமாக ஓடிக் கொண்டிருந்தது.

நந்தவனத்தைப் பார்த்து ரசித்த வாறே ஞானசேகரன் முன்னே சென்று கொண்டிருந்தான். அவன் பின்னால் இந்துசேகரனும் சந்திர சேகரனும் ஏதோ ரகசியமாகப் பேசிக் கொண்டு மெதுவாக நடந் தார்கள். ஓரிடத்தில் ஞானசேக ரன் ஒரு பாறை ஓரமாக நின்று வெகு ஆழத்தில் பாய்ந்து ஓடும் மாலினி நதியின் அழகை ரசித்துக் கொண்டிருந்தான்.

தன் நண்பர்கள் சற்று தூரத் தில் இருப்பதைப் பார்த்த ஞான சேகரன் "நண்பர்களே! இங்கே வந்து அழகான காட்சியைப் பாருங் கள். நதியின் அழகும் இங்குள்ள சுற்றுப்புறமும் எவ்வளவு அழகாக உள்ளது!" என்று அழைத்தான். வந்த இரு நண்பர்களும் அக்காட் சியை ரசிப்பவர்கள்போல நடித்து திடீரென ஞானசேகரனை அங் கிருந்து ஆற்றில் விழும்படித் தள்ளி விட்டு அங்கிருந்து வேகமாகத் தம் விடுதிக்கு ஓடினார்கள்.

அங்கு அவர்கள் தம் பணத்தை எடுத்துக் கொண்டும் ஞானசேகர னின் பணத்தை ஆளுக்குப் பாதி யாகப் பிரித்து எடுத்துக் கொண் டும் உடனே கப்பலேறி மாணிக்க புரிக்கு சென்றுவிட்டார்கள்.

அங்கு அவர்கள் ஞானசேகர னின் பெற்றோர்களிடமும் மற்ற வர்களிடம் "ஞானசேகரனுக்கு வியாபாரத்தில் பெரும் நஷ்டம் ஏற்பட்டுவிட்டது. கையில் பணம் இல்லை. அதனால் அவமானத் தால் அவன் தற்கொலை செய்து கொண்டு இறந்து விட்டான்" என்று கதை கட்டிவிட்டனர்.

ஆனால் உண்மையில் என்ன நடந்தது என்றால் பாறையிலி ருந்து தள்ளப்பட்ட ஞானசேகரன் ஆற்றில் விழாமல் நடுவே அடர்ந்து வளர்ந்திருந்த ஒரு மரத்தின் கிளை களிடையே விழுந்து தன் நினைவை இழந்துவிட்டான். கொஞ்ச நேரத் திற்குப் பின் தன் நினைவு பெற்ற தும் அவன் தன் நிலையைக் கண்டு

பயந்து "ஐயோ! யாராவது என்னைக் காப்பாற்றுங்களேன்" என்று உரக்கக் கத்தினான்.

அப்போது அவ்வூர் பிரபல வியாபாரி சொர்ணகுப்தனின் மகள் சாரதா தன் தோழிகளுடன் அந்த நந்தவனத்தைச் சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் காதில் ஞானசேகரனின் கூக்குரல் விழவே அவள் சில ஆட்களின் உதவியுடன் அவனை மேலே தூக்கி வரச் செய்தாள். பிறகு அவனைத் தன் வீட்டிற்கு எடுத்துப்போய் அவனது காயங்களுக்கு மருந்து போட்டுக் கட்ட வைத்தியரையும் வரவழைத்தாள்.



இதற்குள் சொர்ணகுப்தன் வீட்டிற்கு வந்து ஞானசேகரனைப் பார்த்து "இவன் மாணிக்கபுரி வியாபாரி ஞானசேகரன் அல்லவா! இவன் திறமைமிக்கவன். நான் இவனைப் பாராட்டிப் பரிசுகள் கூட அளித்தேனே" என்றான். ஞானசேகரனும் சொர்ணகுப்தனைப் பார்த்து ஆச்சரியப்பட்டான்.

சொர்ணகுப்தன் ஞானசேகரனிடம் "இந்த விபத்து எப்படி நேர்ந்தது?" என்றுகேட்டான். அவனும் நடந்ததை விவரமாக்க் கூறினான். அதைக்கேட்ட சொர்ணகுப்தன் கொதித்துப்போய் "அந்த துரோகிகளைப் பிடித்து தக்க தண்டனை வாங்கிக் கொடுக்க வேண்டும். நான் அரசாங்கத்திடம் புகார் கொடுக்கிறேன்" என்றான்.

ஞானசேகரனோ "அதனால் ஒரு பயனும் இராது. அவர்கள் இப்போது இத்தீவில் இருக்க மாட்டார்கள். கப்பலில் ஏறித் தப்பிப் போயிருப்பார்கள்" என்றான். சொர்ணகுப்தனும் "நீ சொல்வது சரிதான். அவர்கள் உன் பணத்தையும்கூட எடுத்துக் கொண்டு போயிருப்பார்கள். அந்தத் துரோகிகளைப் பழிக்குப் பழி வாங்க வேண்டும் என்று நீ எண்ணவில்லையா?" என்று கேட்டான்.

ஞானசேகரனும் "பழிவாங்கத் தான் வேண்டும். ஆனால் அரசாங்



கத்திடமிருந்து அவர்களுக்கு தண்டனை வாங்கிக் கொடுப்பதால் அல்ல, என் அறிவால் அவர்கள் வெட்கித் தலைகுனிந்து எங்குமே தலைகாட்ட முடியாதபடி செய்ய வேண்டும். அதற்குமுன் நான் இங்கு வியாபாரம் செய்து கொஞ்சம் பணம் சம்பாதித்துக் கொள்ள நினைக்கிறேன். அதற்கு நீங்கள் ஒரு தொகையைக் கடனாகக் கொடுத்து உதவ வேண்டும். அதனை நான் விரைவிலேயே வட்டியுடன் திருப்பித் தந்து விடுகிறேன்'' என்றான்.

அவன் சொன்னதை எல்லாம் சாரதா கேட்டுக் கொண்டிருந்தாள். அவள் தன் தந்தையைத் தனியே அழைத்துப் போய் ஏதோ கூறினாள். அதுகேட்டு சொர்ணகுப்தன் திரும்பி வந்து ஞானசேகரனிடம் ''என் மகள் உனக்கு ஒரு செப்புக் காசுகூடக் கடனாகக் கொடுக்கக் கூடாது என்கிறாள்'' என்று கூறினான்.

அதுகேட்டு ஞானசேகரன் ''அப்படியா?'' என்று கூறி யோசிக்கலானான். அப்போது சொர்ணகுப்தன் ''என் மகள் உனக்குப் பணம் தரவேண்டாம். அவளையே உனக்குக் கொடுத்துவிடும்படிக் கூறுகிறாள். சாரதா எனக்கு ஒரே மகள். நீ அவளை மணந்து கொண்டு இங்கேயே இருந்து என் வியாபாரத்தைக் கவனித்துக் கொள்'' என்றான்.

ஞானசேகரனும் ''இது நல்ல யோசனை என்றாலும் நான் என் பெற்றோரையும் தாய் நாட்டையும் மறந்துவிட்டு இங்கேயே இருந்துவிட முடியுமா? எனவே இங்கே இருந்து உங்கள் வியாபாரத்தை நான் கவனிப்பது என்பது நடக்காது'' என்றான்.

சொர்ணகுப்தனும் ''நீ உன் தாய் தந்தையரிடமும் தாய் நாட்டிடமும் காட்டும் பற்றுதலை நான் மிகவும் பாராட்டுகிறேன். எனக்கு இருப்பது இந்த ஒரு மகளே. நீ இவளை மணந்து கொள். என் பணத்தோடு நாம் உன் ஊருக்குப் போய் அங்கு வியாபாரம் செய்ய

லாம்'' என்றான்.

ஞானசேகரனும் அதற்குச் சம் மதிக்கவே அவனுக்கும் சாரதா விற்கும் விமரிசையாக விவாகம் நடைபெற்றது. அதன் பிறகு சொர்ண குப்தன் தன் பணத்தோடு அவர் களுடன் மாணிக்கபுரியை அடைந் தான்.

தம் மகனை உயிரோடு கண்ட தும் ஞானசேகரனின் பெற்றோர்கள் மகிழ்ந்து போயினர். இந்துசேகர னும் சந்திரசேகரனும் என்ன செய் வது என்று தெரியாமல் தவிக்க லாயினர். அவர்கள் ஞானசேக ரனைப் பார்க்கக்கூட வெட்கப் பட்டுக் கொண்டு வீட்டிற்குள் அடைபட்டுக் கிடந்தனர்.

ஊரார் ஞானசேகரனிடம் அவ னது இரு நண்பர்கள் கூறிய கட் டுக் கதையைச் சொல்லி "அவர் கள் ஏன் அப்படிச் சொன்னார் கள்?" என்று கேட்டார்கள். ஞான சேகரனும் "பொறாமைப்படுபவர் கள் ஏதோ ஒன்றைச் செய்துவிட்டு ஏதேதோ சொல்லிக் கொண்டு திரிவார்கள். நான் அந்த இருவர் பற்றி விவரமாக எதுவும் கூற விரும்பவில்லை'' என்றான்.

இப்படி ஞானசேகரன் கூறியது அந்த இரு நண்பர்களைப் பற்றி ஊரார் பலவிதமாகப் பேச இடம் கொடுத்தது. ஊரார் அவர்களைக் கொலைகாரர்கள் என்றும் மோசக் காரர்கள் என்றும் தூற்றலாயி னர். இவற்றை எல்லாம் கேட்டுக் கொண்டு சகிக்க முடியாமல் அந்த இரு நண்பர்களும் ஊரை விட்டே ஓடி எங்கோ போய்விட்டார்கள்.

அப்போது சொர்ணகுப்தன் ஞானசேகரிடம் "நீ கூறியதுபோல அந்த துரோகிகளுக்கு அரசாங்க தண்டனை வாங்கித் தருவதைவிட உன் பேச்சாலேயே நீ அவர்களை ஊரைவிட்டுப் போகச் செய்தது பெரிய தண்டனைதான். நீ சரியான படி அவர்களைப் பழிக்குப் பழி வாங்கிவிட்டாய். உன் அறிவைப் பாராட்டுகிறேன்'' என்றான்.



# அம்புலிமாமா செய்திகள்

## நீண்ட நாள்

சென்ற ஜூன் 30-ஜூலை 1 நள்ளிரவில் நாமெல்லாம் அயர்ந்து தூங்கிக் கொண்டிருக்கையில் டில்லியில் நேஷனல் லாபரடெரியின் ஆராய்ச்சியாளர்கள் விழித்துக் கொண்டே இருந்தார்கள். இந்த ஆராய்ச்சிக் கூடத்திலுள்ள ஆடமிக் கடியாரத்தில் ஒரு விநாடியைச் சரி



செய்ய அவர்கள் இவ்வாறு இருக்க வேண்டியதாயிற்று. இவர்களது கணக்கின்படி பூமியின் சூழற்சி வேகம் அன்று ஒரு விநாடி குறைகிறது. அதை அந்த நேரத்திற்கும் நம் கைக் கடியார நேரத்திற்கும் வித்தியாசம் மறுநாளில் இருக்கும். இந்த மாதிரி நிகழ்ச்சியால் பதினோறு ஆண்டுகளுக்கு முன் 1982 ஜூன் 30-ல் ஒரு விநாடி அதிகமாயிற்று. ஆனால் தொலைக் காட்சியில் நேரம் கண்டு நம் கடியாரத்தைச் சரி செய்து கொள்ளும் நாம் இதை எல்லாம் யோசிக்கிறோமா?

## பூமி தப்பியது!

சுமார் ஆறாயிரம் டன் நிறையுள்ள ஒரு சிறிய கிரகம் மே 20ல் மணிக்கு 48,000 மைல் வேகத்தில் பூமியை நோக்கி வந்து கொண்டிருந்தது. அது பூமிக்கு 90,000



மைல் தூரத்தில் வந்தபோது திசைமாறிப் போயிற்று. நல்லவேளை பூமி அதன் தாக்குதலிலிருந்து தப்பியது. அது மட்டும் பூமியைத் தாக்கி இருந்தால் கடும் சேதம் விளைந்திருக்கும் என இரு அமெரிக்க ஆராய்ச்சியாளர்கள் கூறினார்கள். இவர்கள் வானவெளி ஆராய்ச்சிக் கூடத்தில் பணிபுரிபவர்கள்.

## வான வீதியில் வெற்றி!

அமெரிக்காவில் 'எண்டவர்' என்ற வானவெளிக் கப்பலை ஜூன் 21ல் விண்வெளியில் செலுத்தினார்கள். அதில் ஆறு விண்வெளி வீரர்கள் சென்றனர். அவர்களில் நால்வர் நான்கு நாட்களுக்குப்பின் விண்வெளியில் நடந்து ஆறு மாதங்களுக்கு முன் சென்ற யூரேகா என்ற விண்வெளிக் கப்பலைக் கண்டு அதற்கும் எண்டவருக்கும் தொடர்பு ஏற்படுத்தினர். யூரேகா பல ஆய்வுகளை நடத்தி அவற்றின் விளைவுகளை அறிவித்து வருகிறது.




இராமர் பட்டாபிஷேகம் ஆன பின் ஆட்சி பற்றித் தானே நேரடியாகக் கவனிக்கலானார். அவர் ஒருநாள் சுமந்திரரைக் கூப்பிட்டு "மக்கள் நலனுக்காகப் பல வேலைகளைச் செய்யவேண்டும். அதற்குப் போதிய பணம் பொக்கிஷத்தில் உள்ளதல்லவா?" என்று கேட்டார்.

சுமந்திரரும் "கடந்த பதினான்கு ஆண்டுகளாக மக்கள் அரசாங்கத்திற்குச் செலுத்த வேண்டிய பணத்தைச் செலுத்தவில்லை. மக்கள் மாறிவிட்டனர். நாட்டில் நல்ல விளைச்சல் இருந்தும் விவசாயிகள் வரி செலுத்தவில்லை. வியாபாரம் நன்கு நடந்தும் வியாபாரிகள் வரி செலுத்தாமல் ஏமாற்றுகிறார்கள். பணக்காரர்கள் கதையும் இதுதான். ஏழை மக்கள்தாம் என்றும் போலக் கஷ்டப்படுகிறார்கள்" என்றார்.

இராமரும் "அப்படியா? பரதன் என்ன செய்து கொண்டிருந்தான்?" என்று கேட்டார். சுமந்திரரும் "அவர் தங்களுடைய பாதுகைகளை வைத்து பூஜை செய்து கொண்டிருந்தார். வேறெதிலும் கவனம் செலுத்தாததால் அதிகாரிகள் அவருக்கு நினைவூட்டியதும் அவர் மக்களைத் துன்புறுத்தி வரி வசூலிக்கக் கூடாது என்று கூறி விட்டார். அதனால் என்னால் எதுவும் செய்ய முடிய

—இராம ராஜ்யமும் அனுமாரும்—



வில்லை" என்றார்.

இராமர் இனி என்ன செய்ய லாம் என எண்ணிக் கொண்டிருந்த போது இலட்சுமணன் அவர் முன் வந்து நின்றான். சுமந்திரரர் இலட்சுமணனிடமும் பொக்கிஷம் காலியாக இருப்பது பற்றிக் கூறி னார்.

இலட்சுமணன் சற்று யோசித்து "அரசாங்கத்திற்கு வரி செலுத்த வேண்டிய ஒவ்வொருவரும் இது நாள் வரை செலுத்தாத வரிக்கு பதிலாக ஒரு பூசணிக்காயளவு தங்கம் செலுத்தினால் போதும் என்று அறிவிக்கலாம். இதனால் வரி செலுத்துவோர் சிரமப்பட மாட்டார்கள். நம் பொக்கிஷத்தி லும் போதிய பணம் சேர்ந்து விடும்" என்றான்.

இராமரும் அவ்வாறே செய்ய அனுமதிக்கவே நாடெங்கிலும் இலட்சுமணன் கூறியபடி பறை சாற்றப்பட்டது. வரி செலுத்த மக்களே முன் வருவார்கள் என இலட்சுமணன் எதிர்பார்த்த போதி லும் அனுமாரிடம் "நீங்கள் மக் களிடையே போய் இந்தப் புதிய வரி வசூல் பற்றி அவர்கள் என்ன பேசிக் கொள்கிறார்கள் என்று அறிந்து வாருங்கள்" என்று கூறி னான்.

அனுமாரும் யார் கண்களுக்கும் தென்படாதபடி மிகச் சிறிய உரு வில் மக்களிடையே சென்று அவர் கள் பேசிக் கொள்வதை எல்லாம் கேட்டு விட்டுத் திரும்பி வந்தார். அவர் இலட்சுமணனிடம் "பூசணிக் காயளவு தங்கம் வரியாகச் செலுத் துவதை யாரும் ஆட்சேபிக்க வில்லை. இராமர் பரதனை விட அப்பாவியாக இருக்கிறாரே. பதி னான்கு ஆண்டுகளாகச் செலுத்த வேண்டிய வரிபாக்கிக்கு ஒரு பூசணிக்காயளவு தங்கம்தானா செலுத்த வேண்டும்? இது மிகவும் குறைவாயிற்றே எனப் பேசிக் கொள்கிறார்கள்" என்றார்.

அது கேட்டு இலட்சுமணன் "நம் மக்களிடையே நேர்மையான வர்கள் பலர் இருக்கிறார்கள். ஒரு சிலர் அவ்வாறு இல்லாமல் இருக்

கலாம். எனவே நேர்மையாளர்களுக்கு அநீதி இழைக்கக் கூடாது. இதற்கு என்ன செய்வது?" என்று யோசிக்கலானார்.

அதற்கு அவருக்கு ஒரு வழி தெரிந்தது. அவர் அனுமாரை அழைத்து "நாம் இருவரும் தர்ம தேவதையின் ஆலயத்திற்குப் போவோம். அங்கு தேவதையை வேண்டி இதற்கு வழி காண்போம்" என்றான். அனுமாரும் அதற்கு இணங்கி மிகச் சிறிய உருவில் இலட்சுமணனுடன் தர்ம தேவதையின் ஆலயத்திற்குச் சென்றார்.

அங்கு இருவரும் சற்று நேரம் இருந்து தர்ம தேவதையை தியானித்து மனத் தெளிவு பெற்று மெதுவாகப் பேசிக் கொண்டே ஆலயத்திலிருந்து வெளியே வந்தார்கள். அப்போது மாலைப் பொழுது முடிந்து இருட்டி விட்டது. அதனால் மறுநாள் காலை அரண்மனை முற்றத்தில் ஒரு பெரிய தராசை அவர்கள் கட்டித் தொங்க விட்டார்கள். அதன் ஒரு புறத் தட்டில் ஒரு சாதாரண பூசணிக்காய் வைக்கப்பட்டது.

வரி செலுத்துவோர் தங்க மூட்டைகளோடு அங்கு வந்தார்கள். அவர்களில் முதலில் ஒருவன் தான் கொண்டு வந்த தங்கத்தை மற்ற தட்டில் வைத்தான். பூசணிக்காய் தட்டு மட்டும் தாழ்ந்தே இருந்தது. உயர எழும்ப



வில்லை. அதுகண்டு அவன் திடுக்கிட்டு வீட்டிற்கு ஓடிப் போய் தன்னிடமிருந்த தங்கத்தில் கொஞ்சம் எடுத்து வந்தான். அதனை அவன் இரண்டாவது தட்டில் முந்தைய தங்கத்தோடு சேர்த்து வைத்தான். அப்போது இரு தட்டுகளும் சமநிலைக்கு வந்தன. இதைக் கண்ட மற்றவர்களும் தம் வீடுகளுக்குப் போய் மேலும் அதிகத் தங்கம் கொண்டு வந்து தயாராக வைத்துக் கொண்டார்கள்.

இன்னொருவன் பயந்தவாறே தன்னிடமிருந்த தங்கத்தை எதிர்த் தட்டில் வைத்தான். அவன் வைத்த சிறிதளவு தங்கத்திற்கே பூசணிக்காய் வைக்கப்பட்ட தட்டு உயர்ந்து



நிலைக்கு வந்துவிட்டது. அது கண்டு மக்கள் இதென்ன அதிசயம் என்று கூறி மலைத்துப் போனார்கள்.

இப்படியாக அந்தத் தராசு ஒவ்வொருவருக்கும் ஒரு அளவைக் காட்டவே அவர்கள் கொடுத்த தங்கம் அளவில் மாறுபட்டிருப்பதைக் கண்டார்கள். அப்போது அவர்களுக்கு அந்தத் தராசு சாதாரணப்பட்டது அல்ல என்றும் ஏதோ விசேஷ சக்தி கொண்டது என்றும் தெரிந்து விட்டது. அது மட்டுமல்ல, தாம் செலுத்த வேண்டிய வரி இவ்வளவு என அந்தத் தராசு நிர்ணயித்தது கண்டு அவர்கள் திருப்தி அடைந்தார்கள். இப்படியாகப் பொக்கிஷத்தில் நிறைய தங்கம் சேர்ந்து விட்டது.

இப்படி நடந்தது கண்டு இராமர் ஆச்சரியப்பட்டார். அவர் இலட்சுமணனையும் சுமந்திரரையும் தம் அந்தரங்க ஆலோசனை அறைக்கு வரச் சொல்லி விட்டுச் சென்றார். அவர்கள் இராமரின் அறைக்குச் சென்றபோது அனுமாரும் தம் அணு உருவில் உடன் சென்றார்.

இராமர் இலட்சுமணனிடம் "தம்பீ! பூசணிக்காயின் நிறை எவ்வளவு? ஆனால் அது வைக்கப் பட்ட தட்டு ஒரு சிலரிடம் மறுதட்டில் அதிக தங்கம் வைக்கச் செய்தும் வேறு சிலரிடம் குறைவான தங்கம் வைக்கச் செய்தும் சம நிலைக்கு வந்ததே. இதற்கு என்ன காரணம்? இதில் ஏதாவது ஏமாற்று வேலை நடந்திருக்கிறதா?" என்று கேட்டார்.

இலட்சுமணன் பணிவுடன் கை கட்டி நின்றவாறே "இதில் ஏமாற்று வேலை எதுவும் நடக்கவில்லை. தர்ம தேவதையின் கட்டளைப்படி தான் எல்லாம் நடந்திருக்கிறது. இதில் அனுமாரின் பணிதான் குறிப்பிடத்தக்கது. அவர் அணு உருவில் தராசின் முனையருகே இருந்து தர்மதேவதை கூறிக் கொண்டு வந்தபடி முனையை சாய்த்து வைத்தார். தர்ம தேவதை கூறி வந்தது அனுமார் ஒருவரால்

தான் கேட்க முடிந்தது. நானும் அனுமாரும் தர்ம தேவதையை வேண்டி அதன் உதவியை இவ்வாறு பெற்றோம். மக்களில் ஒரு சிலரே தாம் செலுத்த வேண்டிய நியாயமான வரியைக் கொண்டு வந்திருந்தார்கள். மற்றவர்களோ மறுபடியும் தம் வீடுகளுக்குப் போய்த் தங்கம் எடுத்து வர வேண்டியதாயிற்று. அவர்களும் தராசு செய்த நியாயம் சரியே என ஏற்று வரியைச் செலுத்தி பொக்கிஷத்தை நிரப்பி விட்டார்கள். என்வே தர்ம தேவதையின் ஒப்புதலுடன் இதனை நானும் அனுமாரும் செய்து முடித்தோம்'' என்றான்.

இராமர் ஏதோ சொல்ல முயன்றபோது தர்ம தேவதையே வந்து "இராமா! இலட்சுமணன் கூறியது முற்றிலும் உண்மையே. நான் உடன் இருந்து அனுமாரைக் கொண்டு மக்களிடமிருந்து அவர்கள் நியாயமாகச் செலுத்த வேண்டிய வரியை வசூலித்துக் கொடுத்தேன்'' என்று கூறி மறைந்தது. அப்போது அனுமார் தம் அணு உருவிலிருந்து சாதாரண உருவிற்கு வந்து இராமரை வணங்கி நின்றார். இராமரும் அனுமாரை வெகுவாகப் பாராட்டினார்.

சில நாட்களுக்குப் பின் இராமர் கோசல நாட்டு மக்களுக்கு ஒரு விருந்தை அளித்தார். அதற்கான உணவுப் பொருள்களை சேகரிப்



பதிலும் மக்கள் அமர்ந்து சாப்பிட பந்தல் போடுவதிலும் அனுமார் பெரிதும் உதவினார்.

சீதை அனுமார் படும் சிரமம் கண்டு மிகவும் அவர்பால் இரக்கப் பட்டாள். ஏனெனில் அனுமாரால் தானே தனக்கு நல்ல காலம் பிறந்தது என எண்ணி அவரிடம் அவள் பெரும் மதிப்பு வைத்திருந்தாள். அவள் அனுமாரை அழைத்து "அனுமாரே! காலையிலிருந்து வேலை செய்து கொண்டே இருக்கிறீர்களே. இன்னமும் சாப்பிடக் கூட இல்லையே. முதலில் நீர் சாப்பிடும். பிறகு மற்ற வேலைகளைப் பார்க்கலாம்'' என்றாள்.

அனுமாரும் சரி எனக் கூறி



னால் ஒன்றும் செய்ய முடியாது'' என்று கூறிக் கையை விரித்து விட்டார்.

சீதை சமையற் கட்டிற்குத் திரும்பி வந்து அனுமாரின் பின் னால் நின்று தன் மனதில் ''பர மேஸ்வரா! நீங்கள் யாரென்று எனக்குத் தெரிந்து விட்டது. உங் கள் பசியை நீங்கள் அடக்காவிட் டால் எங்கள் மானம் மரியாதை எல்லாம் போய்விடும்'' என்றுகூறி பஞ்சாட்சர நாம ஜெபம் செய்ய லானாள். மறுநிமிடமே அனு மார் ஏப்பம் விட்டுக் கொண்டே எழுந்து அங்கிருந்து சென்றார்.

அதன் பிறகு சீதை அன்ன பூர்ணா தேவியை தியானிக் கவே அவள் உணவுப் பதார்த்தங் களைக் காலியான பாத்திரங் களில் நிரப்பி வைத்தாள். அதன் பின் எல்லோரும் சாப்பிட உட் கார்ந்தனர். அப்போது ஒரு வான ரம் இலையில் போடப்பட்ட சுண்டைக் காயை அமுக்கவே அது விர்ரென்று உயரக் கிளம்பியது. அதைப் பிடிக்க அந்த வானரம் தாவவே மற்ற வானரங்களும் அதைப் போல் தாவலாயின. அனுமார் மட்டும் தாவாமல் ஒரு சிறு தாண்டல் தாண்டியவாறே இராமரைப் பார்த்தார்.

இராமர் வானரர்களின் அமளி கண்டு அங்கு வந்து அனுமாரிடம் ''இந்த வானரர்கள் எல்லாம் இப்

சீதையுடன் சமையற் கட்டிற்குச் சென்றார். சீதை இலைபோட்டு அவருக்குப் பரிமாறலானாள். சீதை பரிமாறிய பண்டங்கள் எல் லாம் மறுவிநாடியே அனுமாரின் வாய்க்குள் போய்விட்டன. சற்று நேரத்தில் விருந்திற்காக சமைக் கப்பட்ட உணவில் பாதிக்கு மேல் அனுமாரே சாப்பிட்டு விட்டார். இதைக் கண்டு சீதை ஆச்சரியப் பட்டு அங்கிருந்து ஓடிப்போய் இரா மரிடம் விஷயத்தைக் கூறினாள்.

இராமரும் சிரித்தவாறே ''அனு மாரை யாரென்று நினைத்தாய்? அவர் சாட்சாத் பரமசிவனின் அவதாரம். அவரைத் திருப்திப் படுத்துவது உன் வேலை. என்

படி உயர எம்பிக் குதிக்கும் போது நீர் மட்டும் இப்படி மெதுவாகத் தாண்டுகிறீரே. என்ன காரணம்?'' என்று கேட்டார். அனுமாரும் ''நான் அந்த மாபெரும் வீரர்களின் முன் எம்மாத்திரம்?'' என்று அடக்கத்துடன் கூறினார்.

அப்போது ஜாம்பவான் இராமர் முன் வந்து ''அனுமாருக்கு அவரது சக்தி என்ன என்று தெரியாது. அதை அவருக்கு யாராவது நினைவூட்டினால் அச்சக்தியை அவர் காண்பிப்பார்'' என்றார். இராமர் ஒரு வெண் தாமரையை அனுமாரிடம் கொடுத்து ''எங்கள் வம்சத்தை உருவாக்கிய சூரியதேவரிடம் இதனை நீர்தாம் சேர்பிக்க வேண்டும்'' என்றார்.

அனுமாரும் ''தங்களது கட்டளையை நிறைவேற்றுகிறேன்'' எனக் கூறி உயரக் கிளம்பிச் சென்றார். அவர் சூரியதேவனை அணுகி ''தேவா! இராமர் இந்த மலரைத் தங்களிடம் சேர்ப்பிக்கச் சொன்னார்'' என்று கூறி மலரை அவரது காலடிகளில் வைத்தார்.

சூரியதேவன் அனுமாரை ஆசீர்வதித்துத் தம் கையிலிருந்த ஒரு வெண் தாமரை மலரை அவரிடம் கொடுத்து ''இதை இராமரிடம் கொடு. இதனால் நாடு வளமுற்று நன்கு விளங்கும்'' எனக் கூறினான். அந்த வெண் தாமரை ஒரு போதும் வாடாது. அது இருக்கும் இடத்தில் உரிய காலத்தில் மழை பெய்து எங்கும் செழுமை இருக்கும். பயிர் நன்கு விளைந்து மக்கள் நோய் நொடியின்றி சுக வாழ்வு வாழ்வார்கள்.

பின்னர் அனுமார் சூரியதேவனிடம் விடைபெற்றுக் கொண்டு வெண் தாமரையுடன் அயோத்திக்குத் திரும்பி வந்து அந்த மலரை இராமரிடம் கொடுத்தார். இராமரும் சீதையும் அதுகண்டு மகிழ்ந்து அனுமாரை மிகவும் பாராட்டினார்கள்.






# வீண் முயற்சி

ராஜாமணி துணிகரச் செயல் களைச் செய்யத் துடியாய்த் துடிப் பவன். அவன் தன் துணிச்சலைப் பற்றித் தன் வீட்டில் பிரமாதமாக அளப்பவன். அதை எல்லாம் கேட் கும் அவனது தாத்தா "ராஜா மணி! நீதான் மகா சூரன் என்று தம்பட்டம் அடித்துக் கொள் ளாதே. நீ சொல்வதைச் செய்து காட்டு. அப்போதுதான் உன்னைப் பாராட்டுவார்கள்" என்றார்.

அதைக் கேட்டு ராஜாமணி "தாத்தா நான் ஒன்றும் வாய்ச் சொல் வீரன் அல்ல. எல்லாம் செய்கையிலும் காட்டுவேன்" என் றான். அப்போது தாத்தா "அப் படியானால் ஒரு வேலை செய். நம் ஊரிலிருந்து ஐம்பது மைல் தூரத்தில் வேலாங்காடு இருக் கிறது. அதில் கட்டழகி காஞ்சனா இருக்கிறாள். அவளைக் கல்யா ணம் செய்து கொண்டு வா பார்க்கலாம்" என்றார் சிரித்த வாறே.

ராஜாமணி வேலாங்காட்டிற் குக் கிளம்பிவிட்டான். அவன் புத்தூரை அடைந்தபோது இருட்டி விட்டது. அதனால் அவ்வூரில் வழிப் போக்கர்களுக்குச் சாப் பாடு போடும் கிழவியின் வீட்டில் போய்த் தங்கினான்.

அந்தக் கிழவி ராஜாமணி காட் டழகியைத் தேடிப் போகிறான் என்பதைத் தெரிந்து கொண்டு "மகனே! உனக்கு ஏன் இந்த வீண் வேலை? அவளைப் பார்க்க வேண்டும் என்றாலே உனக்கு நிறைய அறிவு இருக்க வேண்டும். வெறும் உடல் பலம் மட்டும் போதாது" என்றாள்.

அதைக் கேட்ட ராஜாமணி "பாட்டீ! எனக்கு அறிவும் இருக்

—பாபநாசம் சாமா—



கிறது. பலமும் இருக்கிறது. நான் போய் அந்தக் காஞ்சனாவைக் கல் யாணம் செய்து கொண்டு வரு கிறேன் பார்'' என்று சவால் விட் டான். அதுகேட்டுக் கிழவியும் சிரித்தாள்.

அப்போது ராஜாமணி ''இது போலத்தான் என் தாத்தாவும் சிரித்தார். நீயும் சிரிக்கிறாய். என்னையும் காஞ்சனாவையும் ஒன்றாகப் பார்க்கும்போது நீங்கள் இருவருமே மூக்கின் மீது விரல் வைக்கப் போகிறீர்கள்'' என்றான். மறுநாள் காலையில் கிழவியிடம் அவன் விடைபெற்றுக் கொண்டு காட்டிற்குள் சென்றான்.

காட்டில் வெகுதூரம் சென்ற பின் ராஜாமணி ஓரிடத்தில் ஒரு பாறை மீது உட்கார்ந்திருந்த பெண் ஒருத்தியை அவன் கண்டான். அவளது பின்புறம்தான் அவனுக் குத் தெரிந்தது. அவன் அவளது நீண்ட பின்னலழகை ரசித்தவாறே அவள்தான் காஞ்சனாவாக இருக்க வேண்டும் என எண்ணி ''யார் நீ?'' எனக் கேட்டான்.

அவளோ திரும்பிப் பாராமல் ''நீ யார்? என் முன்னால் வந்து நில்'' என்றாள். ராஜாமணியும் அவள் அழகியாக இருப்பாள் என எண்ணி அவன் முன் போய் நின்றான். ஆனால் அவளது முகத் தைப் பார்த்ததும் திடுக்கிட் டான். ஏனெனில் அவளது முகம் பட்டையாய் மூக்கு, கண், வாய், என்று எதுவும் இல்லாமல் இருந் தது.

அந்தப் பெண்ணும் ராஜா மணியைப் பார்த்தவாறே ''நான் ஒரு அரசகுமாரி. என்னை ஒரு மந்திரவாதி பிடித்து வைத்துத் துன்புறுத்தி வருகிறான். அவன் என்னை வலுக் கட்டாயமாக மணக்க முடியாது. என்னை யாராவது மணக்க விரும்பினால் மூன்று துணிகரச் செயல்களை செய்தாக வேண்டும். அவற்றை எல்லோராலும் செய்துவிட முடி யாது'' என்றாள்.

ராஜாமணியோ ''என்னால் முடியும். மூன்றென்ன, முப்பது

துணிகரச் செயல்களைக் கூடச் செய்து காட்டுவேன்'' என்று மார் தட்டினான். அவளோ ''இந்த மந் திரவாதி என் அழகிய முகத்தை வேறு யாரும் பார்த்து விடக் கூடாது என்று இப்படிச் செய்து விட்டான். நீ என் முகத்தைப் பார்க்க வேண்டுமானால் எதிரி லுள்ள மரத்தில் ஒரு கிளையில் தொங்கும் கண்ணாடி வழியாகப் பார்க்க வேண்டும். ஆனால் அந் தக் கண்ணாடியைப் பல விஷப் பாம்புகள் பாதுகாக்கின்றன. உன் னால் அந்தக் கண்ணாடியை எடுத்து அதன் வழியாக என்னைப் பார்க்க முடியுமா?'' என்று கேட் டாள்.



ராஜாமணியும் ''ஓ! முடியும்'' எனக்கூறி அந்த மரத்தின் மீது ஏறி கண்ணாடி தொங்கும் கிளையை அணுகினான். அவன் அக்கண்ணாடி அருகே போகும் போது அக்கிளை உயர்ந்தது. அவன் அக்கிளையிலிருந்து சட் டெனக் கீழே குதித்தான். அப் போது அக்கிளை தாழ்ந்தது. ராஜாமணி அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு சட்டெ னத் தாவி அந்த கண்ணாடியை எடுத்துக் கொண்டான். அவன் அதன் வழியாக அந்தப் பெண் ணைப் பார்த்த போது அவள் முகம் நன்கு தெரிந்தது. அவள் மிக மிக அழகாக இருந்தாள்.

அப்போது அந்த அழகியும் ''பேஷ், பேஷ்! வீர வாலிபனே! ஒரு துணிகரச் செயலைச் செய்து விட்டாய். நீ இந்தக் காஞ்சனாவை மணக்க வேண்டுமானால் இன் னும் இரண்டு துணிகரச் செயல் களைச் செய்ய வேண்டும். அதோ தெரியும் மலைக் குகையினுள் தான் மந்திரவாதி இருக்கிறான். அந்த குகையை ஒரு பூதம் பார்து காக்கிறது. அதற்கு இரு பயங்கரக் கோரைப் பற்கள் உள்ளன. அவை ஓரடி நீளம். அப்பற்களை வெட்டி எடுத்தால் அந்த பூதம் இறந்து விடும். வெட்டிய கோரைப் பற் களால் மந்திரவாதியைக் குத்தி னால் அவன் இறந்து விடுவான்.



இதை உன்னால் செய்ய முடியுமா?" என்று கேட்டாள்.

ராஜாமணியும் "ஏன் முடியாது? இப்போதே போய் அந்த பூதத்தைக் கொன்று மந்திரவாதியை ஒழித்து விட்டு வருகிறேன்" என்று கூறிவிட்டுச் சென்றான். அவன் அந்தக் குகையின் வாசலை அணுகியபோது பயங்கர பூதத்தைப் பார்த்தான். பூதமும் அவனைப் பார்த்து உறுமியது. ராஜாமணி கையில் கத்தியை எடுத்துக் கொண்டான். பூதம் அவனை அலாக்காகத் தூக்கி விழுங்க முயன்றது. ஆனால் ராஜாமணி சட்டெனத் தன் கத்தியால் அதன் இரு பற்களையும் அறுத்து எடுத்தான். பூதம் துடிதுடித்து விழுந்து இறந்தது.

ராஜாமணி பூதத்தின் கோரைப் பற்களை எடுத்துக் கொண்டு குகைக்குள் சென்றான். அங்கு மந்திரவாதி அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தான். ராஜாமணி தன் கையிலிருந்த கோரைப் பற்களால் ஒரே சமயத்தில் அவன் மார்பில் குத்தினான். அந்த கோரைப் பற்கள் வெண்ணெய்க்குள் இறங்குவது போல மந்திரவாதியின் உடலுக்குள் சென்றது. அவன் துடிதுடித்தான். மறுநிமிடமே அவனது உடல் தீப்பற்றி எரிந்து சாம்பலாகி விட்டது.

ராஜாமணி மகிழ்ச்சியுடன் அங்கிருந்து ஓடினான். அவன் காஞ்சனாவைக் கண்டு நடந்ததை எல்லாம் கூறினான். அவளும் எல்லாவற்றையும் கேட்டுவிட்டு "சபாஷ்! இப்போது நீ வேறொரு துணிகரச் செயலைச் செய்ய வேண்டும். அதோ தெரியும் மரங்களிடையே ஒரு பெரிய குளம் உள்ளது. அதில் நிறைய முதலைகள் உள்ளன. அந்தக் குளத்தின் நடுவே ஒரு தாமரை மலர் உள்ளது. அந்த மலரைப் பறித்து வந்து என்னிடம் கொடுத்தால் நான் அதை முகர்வேன். அப்போது என் முகம் முன்போலாகி விடும். அந்தக் கண்ணாடியும் உடைந்து விடும். எனக்கும் விடுதலை கிடைத்து விடும். இந்தக்

காட்டில் இருக்க வேண்டிய அவ சியம் இராது'' என்றாள்.

ராஜாமணியும் அம்மலரை அக் குளத்திலிருந்து பறித்துக்கொண்டு வருவதாகக் கூறிவிட்டுச் சென் றான். அக்குளத்தில் நிறைய முதலை கள் இருப்பதையும் குளத்தின் நடுவே ஒரு தாமரைப் பூ உள்ள தையும் அவன் கண்டான். குளத் தில் குதித்து அம்மலரைப் பறிக்க முடியாது. அதனால் அவன் காட் டுக் கொடிகளை எடுத்து நீண்ட உறுதியான கயிறு போல முறுக்கி ஒரு முனையை ஒரு மரத்தில் கட்டினான். மற்ற முனையை எடுத்துக் கொண்டு கரை வழியே போய் எதிர்புறமுள்ள மரத்தில் கட்டினான். பிறகு அந்தக் கயி ரைப் பற்றியவாறே தலைகீழா கப் போய் குளத்தின் நடுவே உள்ள மலரைப் பறித்து எடுத்துக் கொண்டான்.

அப்போது முதலைகள் அவனை விழுங்க வந்தன. ஆனால் அவன் அவைகளுக்கு அகப்படாமல் சட் டெனக் கயிறு வழியாக வேகமா கப் போய்க் கரையை அடைந்து விட்டான். அவன் அந்த மலரைக் கொண்டு போய்க் காஞ்சனாவிடம் கொடுத்தான். அவளும் அதனை வாங்கி முகர்ந்ததும் அவள் அது வரை உட்கார்ந்திருந்த பாறையி லிருந்து விடுபட்டு எழுந்தாள். மரத்தில் இருந்த கண்ணாடி சுக்கு



நூறாகியது. அவள் முகம் பட்டை யாக இராமல் மூக்கு முழியுடன் அழகாக விளங்கியது.

அப்போது ராஜாமணி "காஞ் சனா! நீ சொன்ன துணிகரச் செயல் களை எல்லாம் செய்துவிட்டேன். நீயும் விடுதலை பெற்றுவிட்டாய். என்னை நீ மணக்கலாம் அல் லவா?'' என்று கேட்டான்.

அப்போது அவள் பயங்கர மாக சிரித்து "நீ ஒரேயடியாக மகிழ்ச்சிக் கடலில் மூழ்கிப் போய் விடாதே. நீ செய்ய வேண்டிய கடைசித் துணிகரச் செயல் ஒன்று மீதம் உள்ளது. அதை உன்னால் செய்ய முடியாது. அதனால் நீ பேசாமல் உன் ஊருக்கே போய்

விடு'' என்றாள். ராஜாமணியும் "அப்படி என்ன வேலை அது? அதைச் சொல். செய்து முடிக் கிறேன்'' என்றான்.

அவளும் "அந்த துணிகரச் செயல் நீ என்னை மணப்பது தான்'' என்றாள். ராஜாமணியும் "உன்னை மணப்பது ஒரு துணி கரச் செயலா? நீ சம்மதித்தால் நான் உன்னை மணந்து கொள்ளத் தயார்தானே'' என்றான். அவளும் "என் உண்மை உருவைப் பார்த்து விட்டுச் சொல். நான் ஒரு பிசாசு. என்னை மணக்கிறாயா?'' என்று கேட்டாள். ராஜாமணி அவளைப் பார்த்தான். அங்கு அழகிய காஞ் சனாவுக்கு பதிலாக ஒரு பிசாசு தான் இருந்தது.

ராஜாமணி அங்கிருந்து ஓட் டம் எடுத்தான். நேராகத் தாத்தா வின் முன்வந்து தலையைத் தொங் கப் போட்டுக் கொண்டு நின்றான். தாத்தாவும் "எங்கே காஞ்சனா? அவளை நீ கல்யாணம் செய்து கொண்டு வருவதாகச் சொன் னாயே. என்ன ஆயிற்று?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டார்.

அவன் நடந்ததை எல்லாம் கூறி முடிவில் "அவள் பிசாசு என்று தெரிந்ததும் அவளைக் கல்யா ணம் செய்து கொள்ளாமல் ஓடி வந்து விட்டேன். ஆனாலும் நான் சில துணிகரச் செயல்களைச் செய்தேனே'' என்றான்.

தாத்தாவும் "அவற்றால் என்ன பயன்? உன்னால் காஞ்சனாவை விவாகம் செய்து கொள்ள முடிய வில்லையே. நீ என்னிடமாவது அந்தக் கிழவியிடமாவது விவரம் கேட்டிருந்தால் காஞ்சனா யார் என்பதைக் கூறி இருப்போம். நீ ஏதோ துணிகரச் செயல்கள் செய் பவன் போல் அவசரமாக ஓடி னாய். கடைசியில் உன் முயற்சி வீணாகத்தானே போயிற்று. அதற் குத்தான் எதையும் விவரமாகக் கேட்டறிய வேண்டும் என்பது'' என்றார்.





# நண்பர்களா அவர்கள்?

ஒரு நாட்டில் நாராயணன் என்ற ஒரு வியாபாரி இருந்தான். அவனது ஒரே மகன் கேசவன். அவனிடம் நாராயணன் "கேசவா! உலகில் நட்புதான் சிறந்தது. ஆனால் நல்ல நண்பர்கள் கிடைப்பது தான் சிரமம். எனவே நீ நல்ல நண்பர்களைத் தேர்ந்தெடு" என்றான்.

கேசவனுக்கும் பல நண்பர்கள் இருந்தார்கள். புதிய நண்பர்களும் கிடைத்தார்கள். அவர்கள் எல்லோருமே அவனுக்காக எதையும் தியாகம் செய்யத் தயாராக இருப்பதாகவும் கூறினார்கள்.

சில நாட்களுக்குப் பின் நாராயணன் கேசவனைக் கூப்பிட்டு "உனக்கு நண்பன் என்று யாராவது கிடைத்தானா?" என்று கேட்டான். கேசவனும் "ஏன் கிடைக்காமல்? எனக்குப் பல நண்பர்கள் இருக்கிறார்கள்" என்றான்.

அதுகேட்டு நாராயணன் ஆச்சரியப்பட்டு "பல நண்பர்களா? அவர்கள் எல்லாம் உண்மையான நண்பர்கள்தாமா?" என்று கேட்டான். கேசவனும் "ஆமாம். அவர்களில் குறைந்தது பத்து பேர்களாவது உண்மையான நண்பர்கள்" என்றான்.

நாராயணனும் "நான் இவ்வளவு காலம் இருந்தும் எனது உண்மையரன நண்பர்கள் என்று சொல்லிக் கொள்ள ஓரிருவர்தாம் இருக்கிறார்கள். நீ என்னவோ இந்தக் குறுகிய காலத்துள் பத்து உண்மையான சிநேகிதர்கள் கிடைத்து விட்டதாகக் கூறுகிறாய். என்னால் நம்ப முடியவில்லை" என்றான்.

கேசவன்தான் நண்பர்களை அழைத்து வந்து அவர்களைத் தன் தந்தைக்குக் காட்டி "இவர்கள் எல்லாம் எனக்காக உயிரைக்

—கே. சுதா—

கூடக் கொடுக்கத் தயாராக இருப்பவர்கள்'' என்று கூறினான்.

நாராயணன் அப்படியா எனக் கூறி அந்த நண்பர்களை அனுப்பி விட்டு கேசவனிடம் ''இவர்கள் எல்லாம் உன் உண்மையான நண்பர்கள்தானா என்று பரீட்சிக்கலாம். நீ ஒரு பன்றியைக் கொன்று சாக்குப் பைக்குள் கட்டி எடுத்துக் கொள். நீ உன் சிநேகிதன் ஒவ்வொருவனையும் ரகசியமாகச் சந்தித்து நீ யாரோ ஒருவனைக் கொலை செய்து விட்டதாயும் அது வெளியே தெரிந்தால் உனக்குத் தூக்கு தண்டனை கிடைக்கும் என்று அவர்களிடம் கூறு. அந்த நிலையில் உன்னைக் காப்பாற்றும்படி அவர்களிடம் கேள். அப்போது என்ன நடக்கிறது என்று பார்க்கலாம்'' என்றான்.

கேசவனும் தன் தந்தை கூறியபடியே தன் நண்பர்களிடம் ஒவ்வொருவனாக அணுகித் தன் பிரச்னையைக் கூறினான். யாரும் அவனுக்கு உதவவில்லை. சிலரோ ''நான் உனக்கு உதவினால் நானும் இக்கொலைக்கு உடந்தை என என்னைப் பிடித்துக் கொள்வார்கள். நீ பேசாமல் இந்த மூட்டையை வேறு எங்காவது தூக்கிப் போட்டுவிட்டுத் தலைமறைவாகப் போய்விடு'' என்றார்கள். வேறு சிலரோ ''உனக்கு இப்படி ஒரு கஷ்டகாலமா? விதி யாரை விட்டது?'' என்று அனுதாபப் பட்டார்கள்.



இதை எல்லாம் கேட்ட கேசவன் தன் தந்தையிடம் போய் வருத்தத்தோடு அவர்கள் கூறியதை எல்லாம் சொன்னான். அப்போது நாராயணன் "இது நான் எதிர்பார்த்ததே. என் ஆருயிர் நண்பர்கள் ஓரிருவர் இருப்பதாகக் கூறினேனே. அவர்கள் என் பொருட்டு உனக்கு உதவுகிறார்களா என்று பார்க்கலாம்" என்று கூறி முதலில் ஒரு நண்பனிடம் கேசவனை மூட்டையோடு அனுப்பினான்.

அந்த நண்பனும் "உன்னை அதிகமாக எனக்குத் தெரியாது போனாலும் உன் தந்தைக்காக உனக்கு உதவுகிறேன்" எனக்கூறி இரவோடு இரவாக அந்த மூட்டையைத் தன் வீட்டுக் கொல்லையில் புதைத்து விட்டான்.

கேசவனும் வீட்டிற்குப் போய் தன் தந்தையிடம் அந்த நண்பனின் செய்கையைக் கூறினான். நாராயணன் உடனே தன் வேலையாளை அவ்வூர் தலையாரிடம் அனுப்பித் தகவல் கொடுக்கச் சொன்னான். வேலையாளும் தலையாரியிடம் "ஐயா! என் எஜமானனின் மகன் ஒருவனைக் கொலை செய்து என் எஜமானனின் நண்பரின் வீட்டிற்குக் கொண்டு போனான். அந்த நண்பர் அந்த உடலைத் தன் வீட்டின் கொல்லைப் புறத்தில் புதைத்து விட்டார்" என்று கூறினான்.

தலையாரி உடனே தன் ஆட்களை அந்த நண்பரின் வீட்டிற்கு



அனுப்பிக் கொல்லைப் புறத்தில் தோண்டச் செய்து சாக்குப் பையை எடுத்தான். அந்த நண்பனோ "என் நண்பனின் மகன் என்று சொல்லிக் கொண்டு ஒருவன் வந் தான். அவன் இதை எனக்குத் தெரி யாமல் என் வீட்டுக் கொல்லை யில் புதைத்திருக்கிறான் போலி ருக்கிறது. இதுபற்றி எனக்கு ஒன் றுமே தெரியாது" என்றான்.

இதற்குள் கேசவனை நாராய ணன் தன் மற்றொரு நண்பன் வீட் டிற்கு அனுப்பினான். கேசவன் அவனிடம் "ஐயா! நான் நாரா யணனின் மகன். ஒரு கொலை யைச் செய்து விட்டேன். அந்த உடலை என் தந்தையின் நண்பர் ஒருவரிடம் கொடுக்க அவர் அதைத் தன் வீட்டுக் கொல்லை யில் புதைத்து என்னைக் காப் பாற்ற முயன்றார். ஆனால் இந்த விஷயம் எப்படியோ அதிகாரி களுக்குத் தெரிந்து என்னைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள். எனக்குத் தாங்கள் உதவ முடி யுமா?" என்று கேட்டான்.

அதைக் கேட்டதும் அந்த நண் பர் தலையாரியைக் கண்டு "ஐயா! கேசவன் என்ற இளைஞன் மீது கொலைக் குற்றம் சாற்றப்பட்டி ருப்பதாக அறிகிறேன். அவன் அக் கொலையைச் செய்யவில்லை. அதனைச் செய்தவன் என் மகன். எனவே கேசவனை விடுதலை செய்து என் மகனைக் கைது செய்து கொண்டு போங்கள்" என்றான்.

அப்போது நாராயணன் தலை யாரியைக் கண்டு விஷயத்தைக் கூறி சாக்குப் பைக்குள் இருப்பது இறந்து போன பன்றி என்றான். தலையாரியும் சாக்குப் பையை அவிழ்த்துப் பார்த்து ஆச்சரியப் பட்டுப் போனான்.

நாராயணனும் தன் மகனிடம் "கேசவா! உண்மையான நண்பன் என்றால் என் இந்த நண்பனைப் போல இருக்க வேண்டும் என்று தெரிந்து கொள்" என்றான்.



# இயற்கை விநோதங்கள்



## கொரில்லாக்கள்

கொரில்லா மனிதனைப் போல நிமிர்ந்து நடக்கக் கூடியது. ஆனால் அதன் முதுகு வளையாது. எனவே நிமிர்ந்து நடப்பதில் களைத்துப் போய் நான்கு கால்களால் நடக்கும் சிம்பான்ஜி, கிப்பன் உராங் உடான் போல வாலில்லாக் குரங்கு போல் இருக்கும். கொரிலலாவுக்கும் மனிதனைப் போல 32 பற்கள உள்ளன. கடைவாய்ப் பற்கள் நீண்டு கூராக இருக்கும். இதன் கைவிரல்கள் ஐந்து, கைகளால் மரக்கிளைகளைப் பற்றுவது போலக் கால்களாலும் பற்று எதிரிகளை பயமுறுத்தும். ஆனால் எதிர்த்துப் போரிடாது. பலமா ா மார்பில் மனிதர்களைப் போல அடித்துக் கொண்டு ஓலமிடும்.

## மரம் அல்ல, புல்

மிக உயரமாக வளரும் புல் எது தெரியுமா? மூங்கில்தான். சில மூங்கில்கள் 35 - 36 மீட்டர் உயரம்கூட வளரும். 24 மணி நேரத்தில் 90 செ. மீ. கூட வளருமாம். நீளம், நிறம், பருமன் ஆகியவற்றின் அடிப்படையில் மூங்கிலை ஆயிரத்திற்கும் மேற்பட்ட வகைகளாகப் பிரித்திருக்கிறார்கள். சில மூங்கில்கள் 60, 100, 120 ஆண்டுகளுக்குப் பிறகே பூக்கின்றன. இந்தியா, ஜப்பான், சீனா ஆகிய நாடுகளில் மூங்கில் பரவலாக விளைகிறது.

## கொக்கிக் காலா?

நம் வீடுகளில் சுவர் கூரை மூலைகளிலும் கூரை தளத்திலும் தலைகீழாக நடக்கும் பூச்சியைக் காண்கிறோம். இது இப்படி நடக்கும்போது கீழே விழுந்து விடுமோ என நாம் பயப்பட்டாலும் அது விழுவதில்லை. மேஜை இடுக்குகளிலும் சன்னல் சந்துகளிலும் போகும்போது இவற்றில் கால்களைப் பார்க்க முடியும். அவை கொக்கிபோலத் தென்படும். எப்படிப்பட்ட பரப்பானாலும் இக் கொக்கிக் கால்களால் பற்றிக் கொண்டு இது விரைந்து செல்லும். பல கொக்கிகள் இருப்பதால் இது விழாமல் தப்பிக்க ஏதாவது ஒரு கொக்கி உதவுகிறது.



# மங்கை

செப்டம்பர்'93

- ★ ஸ்ரீ விநாயக சதுர்த்தி
- ★ அமெரிக்காவில் முதல் தமிழ் மாணவி
- ★ யோகாசனங்கள்
- ★ ஓவியக் கண்காட்சி
- ★ சமையற்கலைப் போட்டி
- ★ சிறுகதைகள்–கட்டுரைகள்

இதர வழக்கமான பகுதிகள்

விலை ரூ.6/–

# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1993 நவம்பர் மாத இதழில் வெளியிடப்படும்**



D.N. Prasad



Devidas Kasbekar

* தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். * செப்டம்பர் 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.
* எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 100/- பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. * தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026

---

## ஜூலை மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ: **தொட்டாலும் போச்சு**

இரண்டாவது போட்டோ: **விட்டாலும் போச்சு**

பரிசு பெற்றவர்: **சு. செல்வராஜ மோகன், திண்டுக்கல்**




**Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.**

